ஓம் பரப்பிரம்மணே நம: **64-பக்கங்கள்.**

# அமிர்தகுணபோதினி

அறிவை விளக்கி, உற்சாகத்தைப் பெருக்கவல்லதான விகடமும், ஆநந்தகரமான அநுபவ விநோத ஞானகலா விலாஸங்களும் நிறைந்திலங்கும் அமிர்தச் சுவையுள்ள உயரிய மாதப் பத்திரிகை

பத்திராசிரியர்:—திரிசிரபுரம்-எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு.

"எண்ணிய எண்ணியாங் கெய்துப; எண்ணியார்
 திண்ணிய ராகப் பெறின்." (திருக்குறள்.) 



| | | |
|---|---|---|
| கமலம்-7. | சென்னை ஆங்கீரஸ ஞு ஆடிமீ 1௳ | இதழ் 76. |
| Vol. 7. | 1932-ம் ஞு ஜூலைமீ 16௳ | No. 76. |






"சுத்தம் சோறிடும், எச்சில் இரக்கவைக்கும்" என்பர். சரீர சுத்திக்காக ஒவ்வொருவனும் ஸ்நாநம் செய்கிறான். நீர் அழுக்கைப் போக்கும் குணமுடையது. இவன் சுத்தன், அவன் அசுத்தன் என்று சொல்வது கேவலம் சரீரத்தைப்பற்றியல்ல; மனதைப்பற்றியே யென்று ஊகிக்கிறோம். களங்கமற்ற மனதையுடையவனே சுத்தன். அஃதில்லாதோன் அசுத்தனே. மனதைச் சுத்தமாக்க விரும்பினால் துர்க்குணங்களைத் துரத்தவேண்டும். பலவித பொய்களைக் கூறி ஒருவனது ஸம்பாத்யத்துக்கு ஹானியை யுண்டாக்குவோன் சுத்தனோ?—அல்ல. சூரனென்று யாரைச் சொல்லலாம்; கையில் கத்தியை வைத்துக்கொண்டிருப்பவனை யன்று; கத்தியைச் சுழற்றத் தெரிந்தவனையுமன்று; பகைஞர்களின் மத்தியில் நிர்ப்பயமாய்ச் சென்று கத்தியைச் சுழற்றி யுத்தம செய்வோனையே. அவனே சூரன். அதுபோல், சாஸ்திரங்களைக் கற்றுப் பாண்டித்யமடைந்தவனை விவேகி யென்றெண்ணாமல், அந்த சாஸ்திரப்படி அனுஷ்டிப்பவனையே விவேகி யெனவேண்டும். கண்ட இடமெல்லாம் சுற்றி யலுத்து வீட்டிற்கு வந்தவுடன் அப்பாடா, சுகமாயிருக்கிறதென்று சொல்லுகிறோம். இதைப்போல் கண்ட இடங்களில் அலைந்து திரியும் மனம் ஓரிடத்தில் நின்றால் ஆநந்தமுண்டாகும். இவ்வித நிலைமையை யடைவதற்குத்தான் யோகிகள் பிரயாசைப்படுகின்றனர். ஆதலின், தேக சுத்தத்தோடு மனோசுத்தத்தையே பெரிதாக மதித்து அதற்கு சாதகமான கர்மங்களைச் செய்யக்கடவோம்.

ஃ

"உலகம் ஸந்தா ? அஸந்தா ?" அதாவது உலகம் பொய்யா, மெய்யா என்பது கேள்வி. இதற்கு சமாதானம் உலகம் பொய்யுமல்ல, மெய்யுமல்ல ; அல்லது பொய்யும் மெய்யும் கலந்ததுமல்ல ; அது இன்னதென்று சொல்லப் படாதது. பெரிய மலையின் சிகரத்திலிருந்து கீழே இருக்கும் மனிதர்களைப் பார்க்கும்பொழுது அவர்கள் மூன்றடி உயரமென்கிறேன். என் கண்ணை நம்பித்தானே நான் சொன்னேன். அது உண்மையா ? என் கண் என்னையே ஏமாற்றிவிட்டது. மலையினின்றுங் கீழே வந்தபிறகு மனிதர்கள் ஆறு அடி உயரமென்று அறிகிறேன். அதுபோல் ஊன்கண்ணால் நோக்காமல் ஞான நேத்திரத்தால் பார்த்தால் உண்மையும் பொய்யும் தெரியும். பிரபஞ்சம் மாயையின் காரியமென்பதை ஞானிகள் அறிவர். ஒரு மனுஷ்யன் நாடகத்தில் ஸேவக வேஷம்பூண்டு காவலிருக்கிறான். அந்த மனிதனே பிறகு இராஜா வேஷம்பூண்டு அதிகாரம் செலுத்துகிறான். அதே மனிதன் ஸ்திரீ வேடம் புனைந்து நடிக்கிறான், மினுக்குகிறான், குலுக்குகிறான். இவனுடைய உடைகள் மாறுகின்றனவேயன்றி சரீரம் மாறுகிறதில்லை. இதைப்போலவே, பிரபஞ்சம் வெவ்வேறுவிதமாய்க் காணப்படினும், அத்தோற்றங்களை நாம் உண்மையென்று அதாவது நிலைத்தவை யென்றெண்ணி ஏமாறலாகாது. இப்படியே ஆத்மாவுக்குக் கர்மத்தினால் பல சரீரங்கள் உண்டானாலும் அத்தோற்றங்கள் உண்மையல்ல. நாமரூபமுள்ள வஸ்து நாசமடையும். துக்க சுகங்களை யனுபவிக்கும் ஆத்மா ஒருபோதும் அழியாதது. அதற்கு சுகமு மில்லை, துக்கமுமில்லை. ஒரு நூலில் பலவித புஷ்பங்கள் கோர்த்திருப்பது போல் பிரபஞ்சம் பலவகையாகக் காணப்படுகிறது. ஆயினும் நூல் ஒன்றே. அதுபோல் பரமாத்மா ஒன்றே.

ஃ

"மனதே மனதுக்குப் பந்து, மனதே மனதுக்குச் சத்துரு" மனதின் தன்மைக்குத் தக்கபடியே உயர்வும் தாழ்வும் லபிக்கும். உத்தம சிந்தனைகள் பெருகுங்காலையில் விருத்தி வழியும் தானே தோன்றும். துரோக நினைவுகளால் மூடுண்ட உள்ளம் சோதனைகள் நிரம்பிய பள்ளத்தில் விழும். உலகத்தில் தாயினுடைய நிலைமை ஸர்வோத்கிருஷ்டமானது. அந்த நிலைமையை ஒவ்வொருவரும் நன்றாய்த் தெரிந்துகொண்டால் எந்தக் கர்மத்தையும் ஈசுவ ரார்ப்பணம் செய்வது எளிதாகும். தாயின் பிரியத்திற்கு மேற்பட்ட பிரியம், கடவுள் பிரியம் ஒன்றுதான். தாய் முதலில் தன் குழந்தைகளை சம்ரக்ஷித்துப் பிறகு தான் உண்ணப் போகிறாள். தன் உயிரைக் கொடுத்தேனும் தன் குழந்தையின் உயிரைக் காப்பாற்றத் துணிகிறாள். அவ்விதமே நாமும் மற்றவரின் நன்மைக்காக நம்மைத் தியாகம் செய்ய முற்படுவோமாயின் வெகு சீக்கிரத்தில் ஈசுவரத்தன்மையை யடைவோம். நமது உள்ளம் களங்கமற்றதாய்ப் பரிசுத்தமாய்விடும். ஒரு தாயின் அன்பினில் நாம் நின்று அவ்வித அன்பை உலகுக்கும் காட்டப்புகுந்தால் ஹா ! நமது ஹிருதயம் எத்துணையோ உத்ஸாகங்கொண்டதாய்விடும். நம்மை இவ்வாறு பயிற்றுவதன்பொருட்டே நமக்கு மனைவி மக்களைப் பகவான் கடாக்ஷித்துள்ளார். ஒவ்வொருவனும் தன் சுகத்தை நாடாமல் தன் மனைவிமக்களின் சுகத்தையே பிரதானமாக

---

"பின்னுக்கு அல்ல, முன்னுக்கு என்றால், எங்கே போகவும் எனக்குச் சம்மதமே."

நினைக்கிறான். இவ்விதமாக நினைத்து, தன் சுகத்தை விட்டுக்கொடுக்கும் வழியைக் குடும்பபாசத்தின் மூலமாகத் தெரிந்துகொண்டு, அவ்விதமே உலக நன்மைக்காகவும் தன் சுகத்தைத் தியாகம்செய்து, நித்தமும் தான் புரிந்த நலங்களைப் பகவானிடம் கணக்கு ஒப்புவித்து வருவானுயின் நாளடைவில் அவன் ஒரு மகான் ஆகிவிடுவான். உத்தம ஹிருதயம் படைத்தோனைக் கடவுள் என்றும் ஆசீர்வதித்து வருகின்றார். அவனது எண்ணங்களெல்லாம் நிறைவேறுகின்றன. அவன் உலகினரால் பெரிதும் போற்றப்படுகின்றான். நாம் ஸம்பாதிக்கிறோம், நாம் செய்கிறோமென்று எண்ணுவது கூடாது. அது கர்வபுத்தியைத் தோற்றுவிக்கும். பகவான் கொடுக்கிறார், பகவான் நம்மை நடத்துவிக்கிறார், பகவான் நம்மைக் காண்கின்றார் என்று எல்லாம் ஈசுவரமயமாகவே எண்ணவேண்டும். இதுவே உய்யும் வழி.

ஃ

"நல்லெண்ணமே அனைத்திற்கும் நற்றுப்" எந்த மனுஷ்யன் இவ்வுலகத்திலுள்ள ஸ்திரீகளையெல்லாம் பராசக்தியென்று நினைக்கிறானே அந்த மனுஷ்யனே புண்யவான். எந்த ஸ்திரீயானவள் புருஷர்களை யெல்லாம் பரமேசுவரனுகப் பாவிக்கிறாளோ அவளே புண்யவதி. அவளே பாக்கியசாலி. கர்மமானது அதாவது ஒரு வேலையானது கௌரவமா யிருந்தாலும், கீழ்த்தரமாயிருந்தாலும் பாதகமில்லை, ஒவ்வொருவனும் தன் நிலைமைக்கு ஏற்ற நற்கருமத்தைத் திருப்தியாகவும், பகவான் தன் காரியங்களைப் பார்க்கிறார் என்ற நினைவுடனும் செய்வது அவசியம். அப்படிச் செய்தால் வரவர அக்கர்மங்களின் பலனை யுத்தேசிக்காது செய்யும் நற்பழக்கம் உண்டாய்விடும். அந்த நற்பழக்கமுண்டானல் மோக்ஷம் கிடைக்குமென்பதில் தடையில்லை. காலுக்கு உபயோகமான நல்ல பாதரக்ஷையைச் செய்யும் தாழ்ந்த ஜாதியானுகிய சக்கிலியன், உயர்ந்த குலத்திற் பிறந்து நன்னெறியற்றுக் கண்டவாறு திரிந்து ஊறிவழியும் உபாத்தியாயரைக் காட்டிலும் உத்தமனுவான்.

ஃ

"விவேகாநந்த ஸ்வாமிகள்" 1902-ம் வருஷத்தில் பரிபூரணமான ஸ்வாமி விவேகாநந்தர் ஞானபூமியில் விதைத்த விதைகள் இன்று எல்லோருக்கும் பயன் கொடுத்துக்கொண்டு நிற்கின்றன. ஸ்வாமிகளிடமிருந்து பிரஸங்க ரூபமாய்ப் புறப்பட்ட வேதாந்தமென்னும் பிரவாகமானது இமயமலையிலிருந்து உற்பத்தியாகிப் பனிக்கட்டிகள் கரைந்துவழியப் பெருகியோடி ஜில்லென்றிருக்கும் கங்காநதியைப்போல் பற்பல கண்டவாஸிகளின் உள்ளத்தையும் குளிரச்செய்து அவர்களுக்கு ஞானம் என்னும் பலனைக் கொடுத்திருக்கின்றது. அமெரிக்காவில் ஸ்வாமிகள் இருந்தபோது தங்கள் தேசத்திலேயே தங்குமாறு அந்நாட்டினர் எவ்வளவோ பிரார்த்தித்து வேண்டினர். ஆயினும், துறவியாகிய அவருடைய மனம் இந்தியர்களிடமே சென்றது. பிச்சைக்காரனுடைய உடையும், கங்கைக்கரையும், ஏழைகளின் பரிதாபநிலையும் ஸ்வாமிகளின் சித்தத்தைக் காந்தமிழுப்பதுபோல் இழுத்து இந்தியாவுக்குக் கொணர்ந்

---

"அவன் பெரிய ஆபத்துள் இருந்தான். படுத்து உறங்கிப் பிறகு எழுந்து தேவன் வரவிட்ட சௌரியச் செயலைச் செய்யப் புகுந்தான்." உனக்கும் அப்படியே சமயமும் சௌரியமும் தேவ அருளால் கிடைக்கலாம்.

துவிட்டன. ஸ்வாமிகளுக்கு அமைந்த வாக்சாதுரியத்தையும், கம்பீரியத்தை யும், தைரியத்தையும் கண்டு வியப்புறாத வெள்ளைக்காரரில்லை. முன்னோர் களின் ஆசார ஸம்பிரதாயங்களைக் கண்டிக்கும் இயற்கை இவரிடமில்லை. பற் பல உட்பிரிவுகளையுடைய ஹிந்துக்களின் கொள்கைக ளெல்லாவற்றையும் ஆதரித்துப்பேசி எதிராளியை வாயெடுக்கவொட்டாமற் செய்யும் தன்மையும் திறமையும் ஸ்வாமிகளிடம் விசேஷமாயுண்டு. விரக்திமார்க்கத்தை யுபதேசித்த உண்மையான ஸந்யாஸியாகிய இப்பெருமான் பூரணமாகும் தினத்திற்கூட மூன்றுமணி நேரம் ஸமஸ்கிருதததில் வேதாந்தங்களைப் போதித்தார். பின்பு ஆயாஸமாய் ஸயனிக்கச்சென்றவர் எழுந்திராமல் கடவுளிடம் சேர்ந்தார். ஸ்வா மிகள் இன்ன தெய்வத்தை வணங்கென்றும், இன்னாரை ஆசாரியராகக் கொள் என்றும் சொல்லவேயில்லை. மனிதன் தன்னை இன்னானென்று அறியவேண்டு மென்பதே அவருடைய கோரிக்கை. அவர் அடிக்கடி கூறும் வாக்கியங்களா வன:—விழித்துக்கொள்—எழுந்திரு — நில்லாதே — உன்னுடைய காரியம் நிறைவேறும்வரை உழைத்துக்கொண்டிரு என்பதாம்.

ஃ

"**ஆராதன தெய்வம்**" ஒவ்வொருவரும் தம் இஷ்ட தெய்வத்தினிடத் தில் உள்ளங்கனிந்து அன்பு பெருகிப் பக்தி செய்யவேண்டும். எவ்வகைச் சோதனையின்போதும் தமது ஆராதனதெய்வம் தம்மை நிச்சயமாகக் காக்கும் என்று உறுதிபடைக்கவேண்டும். தமது மதத்தினுள்ளும் சாஸ்திரங்களினுள் ளும் உட்கருத்தை நாடி ஆராயவேண்டுமேயல்லாது, நுனிப்புல் மேய்வது போல் மேற்போர்வையைக் கவனித்தல் ஒண்ணாது. வித்தியாஸப்படுபவை மேற்போர்வைகளேயன்றி, உட்கருத்து எங்கும் ஒன்றே.

ஃ

பகவத் **ஸ்தோத்திரம்:**—ஸகலத்துக்குங் காரணனாய், ஸர்வ வியாபியாய், ஆதித்தன்முதல் அணுபரியந்தம் அந்தரியாமியாய், ஆளாநின்ற ஓ பரம புரு ஷனே! உம்மை அன்புடன் சிந்திப்போமாக. எந்த புருஷன் ஸகல ரூபங்களை யும் விசேஷமாய் உண்டாககிப் பெயர்களையுமீந்து, அப்பெயர்களால் வியவ ஹரித்துக்கொண்டிருக்கின்றானோ அப்படிப்பட்ட அருட்கடலாகியும், சூரிய னைப்போல் ஜ்வலித்துக்கொண்டும், அஞ்ஞானத்துக்குப் புறம்பாகியும் விளங்கு கிற புருஷோத்தமனே! நின்னைத் தியான மார்க்கத்தால் தொழுது கரையேறு வோமாக.

ஓ! ஜகத்ரக்ஷகா! சர்வக்ஞனும், புராதனனும், ஸகல பிரபஞ்சங்களை ஆளுவோனும், அணுவிலும் அணுவாகி யாவற்றையும் தரிக்கின்றவனும், சிந் திக்கக்கூடாத ஸ்வரூபமுள்ளவனும், அந்தகாரத்தைக் கடந்த சூரியப்பிரகாஸ னும், புருஷோத்தமனும் ஆகிய உம்முடைய திவ்ய ஸ்வரூபத்தையே பக்தி யோகத்தைக் கொண்டுணர்ந்து வேறொன்றையும் பற்றாது நின் திருவடி களையே பற்றி நின்னையே அடைவோமாக.

"எதை வேதாந்த முணர்ந்தவர்கள் நாசரஹிதமானதென்று சொல்லு கிறார்களோ, எதைப் பற்றற்று இந்திரிய நிக்கிரகம் பண்ணினவர்கள் அடை கின்றனரோ, எதை யறிய விரும்பி சேதனர் பிரமசாரிகளாகிறார்களோ—அப்

படிப்பட்ட பரமபதத்தை அடியோம் அடையும் வழியீதென்று விளக்கியருள்வாய்.

ஓ பகவானே! நீர் சராசரங்களடங்கிய இந்த லோகத்திற்குத் தந்தையும், பூஜிக்கப்படத் தக்கவரும், உத்தமரான குருவுமா யிருக்கின்றீராகலின், மூன்று லோகங்களிலும் உமக்குச் சமானமில்லை, உமக்கு மேலானவருமில்லை. ஆகவே, எம் சரீரத்தை நின் பாதமலர்களில் தாழ்த்தி நின்னை வணங்கி, நியாமகனும் பூஜாநீயனுமாகிய நின்னையே பிரஸன்னமாகக் கொண்டோம். கர்த்தனே! தேவதேவே! புத்திரனைப் பிதாவும், சிநேகிதனைச் சிநேகிதனும், நாயகியை நாயகனும் க்ஷமிப்பதுபோல எம்மையும் எமது அபராதங்களைக் கருதாது க்ஷமித்துக் காத்தருள்வாய். ஓம் தத்ஸத்.

## சந்தித்த சந்திப்பு அதிர்ப்தியாய் முடிதல்.

அவரோடு அதிகப் பழக்கமில்லை. ஏதோ அவரைத் தெரிந்துவைத்த அறிமுகத்தோடு முடிவு. அதன்பின் நெடுநாள் அவரைக் கண்டதுமில்லை. இருக்குமிடமும் தெரிந்ததில்லை. பின் ஓர்கால் சந்திக்க நேர்கிறது. இருவரும் பரஸ்பரம் பழயநாள் நினைவில் பல பல பேசுகிறார்கள். வீட்டுக்காரன் வந்தவரை அன்புடன் சிற்சில உதவிகளுக்கு வேண்டுகிறான். வந்தவரோ ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு சாக்கு சொல்லிக் கழித்து ஒதுங்கிக்கொள்கிறார். அன்பு தோற்றம் காண முடியவில்லை. வீட்டுக்காரரின் கடைக்குப் பக்கத்தில் மற்றொரு கடைபோட வீட்டுக்காரரையே கேட்கிறார். வீட்டுக்காரருக்கு நெஞ்சு திடுக்கிடுகின்றது. எங்கு தமது கடைக்குப் போட்டி ஏற்படுமோவென அஞ்சுகிறார். இதனிடையில் பணஉதவி வேண்டுமென்றும் ஒரு ஐந்து ரூபாய் தரும்படியும் வந்தவர் வேண்டுகிறார். தந்தாலோ அது திரும்பி வரப்போவதில்லை. பிறகு இந்த மனிதரும் கண்ணில் தென்படுவதரிது. இதற்குமுன்னர் பலபல தந்ததற்கு எவ்வித பயனும் காணலே. ஏதோ கிடைத்தது பறித்துச் செல்வோரில் ஒருவராக நினைக்க நேர்ந்துவிடுகிறது. வீட்டுக்காரர் தன் கஷ்டத்தில் ஏதும் தருவதற்கு இல்லையென, வந்தவரும் எழுந்து சென்றுவிடுகிறார். அவருக்கு வீட்டில் புசிப்புக்கு ஏற்பாடு செய்திருந்தும், பணம் தராமல் புசிப்புமட்டும் இட்டுப் பயனில்லையென்று வீட்டுக்காரர் மவுனமாகிறார். கடைசியில் சந்திப்பு அதிர்ப்தியாய்க் கோணலாக ஒற்றுமையின்றி முடிகிறது.

# "அமிர்த குணபோதினி"யின் நிர்வாகத்தில் புதிய மாறுதல்.



தமிழ் நாடெங்கணும் புகழ் வாய்ந்த பத்திரிகையாகிய "அமிர்த குண போதினி"யின் சொந்தக்காரராக இது காறும் இருந்துவந்த ஸ்ரீமான் T. இராஜ கோபால் முதலியார் தமக்குண்டான பல கஷ்டங்களாலும் நிர்ப்பந்தங்களாலும் "அமிர்த குணபோதினி"யி னின்றும் விலகிக்கொண்டு விட்டதை யறிவிக்க வருந்து கின்றேம். ஸ்ரீமான் முதலியார் 29-6-32-ல் "அமிர்த குணபோதினி"ப் பத்திரிகையையும், "அமிர்த குணபோ தினி" அச்சுக்கூடத்தையும், மற்றும் அவருடைய "ஆங் கில ஆசான்" போன்ற புஸ்தகங்கள் எல்லாவற்றினு டைய 'காபிரைட்' பாத்தியதைகளையும் மதுரையில் பிரபல வியாபாரஸ்தரும், அதி தனவந்தரும், மிகு கௌரவம் வாய்ந்த பெரியோருமாகிய ஸ்ரீமான் இ. மா. கோபால கிருஷ்ணக் கோன் அவர்கட்கு விக்கிரயம் செய்துகொடுத்து விட்டார். ஆதலின் "அமிர்த குணபோதினி"ப் பத் திரிகைக்கு இது முதல் ஸ்ரீமான் இ. மா. கோபால கிருஷ் ணக்கோன் அவர்களே சொந்தக்காரராவார். அவரது நிர்வாகத்தில் "அமிர்த குணபோதினி" மிக்க மேன்மை யாக நடைபெற்று வரும். இனி "அமிர்த குணபோதினி" யின் சம்பந்தமாக எழுதுங் கடிதங்களையும், பத்திரிகையின் சந்தாத் தொகைகளையும் ஸ்ரீமான் இ. மா. கோபால கிருஷ்ணக் கோன் அவர்கள் 302, தங்கசாலைத் தெரு, சென்னை என்ற விலாஸத்திற்கே அனுப்பக்கோருகிறேம். T. இராஜகோபால் முதலியார் என்று இனி குறிப்பிடக் கூடாது.

ஃ

---

"தட்டுகிறவனுக்குத் திறக்கப்படும், அவன் உள்ளேபோவான. கேட்கிறவ னுக்குக் கொடுக்கப்படும். 'அவரை'த் தேடுகிறவனுக்கு அவர் தம்மை ஒளியார்"

ஸ்ரீமான் T. இராஜகோபால் முதலியார் விலகிக் கொண்ட போதிலும், "அமிர்த குணபோதினி"யின் ஸ்தாபகரில் ஒருவரும், ஆதி முதற்கொண்டு அதன் பத்திராசிரியராய் இருந்து வருபவருமான ஸ்ரீமான் எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு தமது ஜீவகாலம் வரையும் ஆசிரியராக இருந்து மிகச்சிறப்புடனும் நடத்தி வருவாராதலால், நமது அன்பிற்கினிய கையொப்ப நேயர்களனைவரும் எப்போதும் போல் "அமிர்த குணபோதினி"யை ஆதரித்து அபிவிர்த்தி செய்யுமாறு பிரார்த்தித்துக் கொள்கின்றோம். இப்போதைய சொந்தக்காரராகிய ஸ்ரீமான் இ. மா. கோபால கிருஷ்ணக்கோன் அவர்கள் "அமிர்த குணபோதினி"யை மேன்மையான நிலைக்குக் கொண்டுவர வேண்டுமென்ற நற்கருத்துடனேயே அதைக் கிரயத்துக்கு வாங்கி யிருக்கின்றார். ஆதலின் அவரது நிர்வாகத் தலைமையின் கீழ் "அமிர்த குணபோதினி" மிகு உன்னதமாய் விளங்கு மென்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

எஸ். ஜி. இராமாநுஜலு நாயுடு, பத்திராசிரியர்.

## கடமையை நடத்தியபிறகே ஓய்வு.

அவரவர்கட்குரிய அன்றைய வேலைகளையோ கடமைகளையோ செய்து முடித்துவிட்டு, அதன்பிறகு ஏற்படும் ஓய்வுநேரத்தில் யாவரும் கூடிக்கொண்டு உல்லாஸமாய் மகிழலாம். அதுதான் நியாயமான பூரிப்பாகும். அவ்விதமின்றி தன் வேலையை—கடமையைச் செய்யாமலோ, சோம்பியோ, பாதிமட்டும் செய்துவிட்டோ, மற்றவர் கூட்டத்தில் கூடிப் பூரிப்பதாகில், அது பூர்த்தியான மகிழ்ச்சியாயிராது. இன்னும் வேலை பாக்கியிருக்கிறதென்ற கவலை அடிக்கடி தோன்றித் தொந்தரை செய்யும். அப்படா! வேலை தீர்ந்தது என்று ஒன்றை முடித்துவிட்டு அந்த விசாரம் நீங்கி எழுந்திருப்பதிலுள்ள இன்பம்—இப்படிப் பாதிவேலையில் எழுந்திருப்பதிற் காணமுடியாது.




# அன்பு பெரிதா?—நியாயம் பெரிதா?



நந்தித்தலென்பது அன்பிலு மிருக்கிறது; நியாயத்திலு மிருக்கிறது. ஒருவரிடம் அன்பு பாராட்டி மகிழ்கின்றோம். மற்றொருவரிடத்தில் நியாயமாய் நடந்துகொண்டு அதற்காக உள்ளம் பூரிக்கின்றோம். கடைக்காரன் காலணுவுக்குப் பதிலாகத் தவறிக்கொடுத்த அரை ரூபாயை அவனிடம் திருப்பித்தரும் நியாய ஒழுங்கில் நமக்கு எவ்வளவோ மனோ சமாதானம் ஏற்படுகின்றது. அச்சமயம் நம்மைத் துராசைக்கு இடம்கொடாத மனிதனாகத் திருத்திக்கொள்கிறோம். அன்பையோ, நியாயத்தையோ ஒரு குறித்த ஒழுங்கின்படி செய்வதில் பிழை ஏதும் நேரிடாது. எனினும், பல சமயங்களில் அன்புக்கும் நியாயத்திற்கும் போட்டி உண்டாகிவிடுகின்றது. அன்புக்கு இணங்கி நடந்தால் நியாயம் தவறுகிறது. நியாயத்தின்படி நடப்பினோ அன்புக்கு மதிப்பேற்படுவதில்லை. இருபக்கத்திலும் ஒரு விவாதம் தோன்றும்போது நாம் அன்புகொண்டிருப்போரின் சார்பிலேயே சேருகிறோம். நம்மைச் சேர்ந்தவர்மீதே குற்றமிருப்பினும், எதிர்ககூியிலுள்ள நியாயத்தைப் பொருட்செய்யாமல் நமது அன்பினரின் பக்கமே வாதாடுகிறோம். அக்கிரமகாரியம் ஒருவன் செய்தாலும் நமக்கு அவனிடம் ஏற்பட்ட அன்பு அதைப் பிசகாக நினைப்பதில்லை. அந்த அக்கிரமத்தைச் சமாளித்துக்கொண்டுபோகவும் முயல்கிறோம். அடுத்த வீட்டுச் சிறுவனை முதலில் அடித்தது நமது பையனேயாயினும், அதை நாம் அவனிடத்துள்ள அன்பின் காரணமாக வெளியிட்டுக்கொள்வதில்லை. வேறொருவர் வீட்டிலிருந்து ஒரு வஸ்துவை நமது குழந்தை எடுத்துவந்தபோதிலும், அந்தக் களவுச்செய்கை நமது குழந்தையின்மீது ஏற்படக்கூடாதென்ற அன்பினால், குழந்தையைமட்டும் கண்டித்துவிட்டு அவ்விஷயத்தை மறைத்துவிடுகிறோம். களவாடப்

---

'ஆள்வசிய சக்தி' எல்லோருக்குமே அமைந்து விடுகிறதில்லை. எவ்வளவோ துறவிகள் இருந்தும் ஒரு சிலரே ஜனங்களைத் தம் வசமாக வசீகரித்து ஞானபோதம் செய்கின்றனர்.

பட்ட பொருள் அதற்குரியவரிடம்போய்ச் சேருவதில்லை. அதை அவர்களிடம் கொடுப்பின், நடந்த களவு வெளியாகி நமது குழந்தையின் பெயர் கெட்டுவிடுமென்று மௌனமாகிறோம். இதை அன்பினால் நாம் செய்வதாயினும் நியாயத்திற்கு ஒத்ததாகுமா?

ஃ

தன் இளைய மனைவியினிடத்துள்ள அன்பால் மூத்த தாரத்தின் குமாரனுக்குத் துரோகம் செய்கிறான். அன்னிய நங்கையிடத்துக்கொண்ட மோகத்தால் தன் மனைவியை ஒருவன் மறந்துவிடுகிறான். இது அன்பாற்செய்வதாயினும் நியாயமாகுமோ? நமக்கு ஒரு பதவி, ஒரு உத்தியோகம் கிடைக்கச் செய்தவர் என்ற காரணத்தால் ஒருவர்மீது அதிக அன்புவைத்து, அவருக்கு வேண்டியவர்களைக் காலியாகும் வேலைகளுக்கு நியமித்துவிடுகிறோம். இது அன்பாற் புரிவதாயினும், அந்த வேலைகளுக்காகக் காத்திருக்கும் தக்கோரான மற்றவர்களை நாம் கவனியாமற் புறக்கணித்துவிடுவது நியாயம் தவறிய செய்கையேயன்றோ? அன்பு பெரிதா ?—நியாயம் பெரிதா ? நியாயமே பெரிது. ஒருவருக்கொருவர் அன்பு கொள்வதற்கு மூன்று காரணங்களுண்டு. ஒன்று தொடர்பாயுள்ளது. இது பெற்றோர், குழந்தைகள், ஸகோதரத்துவம், பந்தத்துவம் முதலியவற்றால் உண்டாவது. மற்றொன்று இடைக்காலத்தில் எதிர்பட்டுத் தோன்றிக் கூடிவருவது. இதில் புதிய பந்தத்துவம், புதிய நேசம் முதலியன அடங்கும். கடைசியாக உள்ளது ஒரு காரணம்பற்றித் தோன்றுவது. அந்தக் காரணம்தீர்ந்ததும் அந்த அன்பும் முடிந்துவிடும். இது மிகவும் கேவலமான கடைபட்ட அன்பு. தற்காலத்துக்குமட்டும் காதலர்கள்போல் தோற்றுவோரிடத்து இந்த அன்பைக் காணலாம். அன்னோரின் காம இச்சை தீர்ந்ததும் காதலின் உறுதிகள் யாவும் காற்றில் பறந்துவிடும். சுபநல பூர்த்திக்காகவே இன்னோர் அன்பு காட்டுகிறார்கள். இரவல் புஸ்தகப் பிரியனான நாராயணனுக்கு அவன் கேட்கும் புஸ்தகங்களையெல்லாம் மறுக்காமல் கொடுத்துக்கொண்டிருக்கிற வரையில் அவனுடைய அன்பு பெருகி நிற்கும். ஆயிரம் தடவை நமது வீட்டுக்குவந்து காதற்கிளிபோல் கொஞ்சுவான். நாம் எது விரும்பினும் அந்த நிமிஷமே நமக்குக் கொணர்வான். பெற்றுக்கொண்டுபோகும் புஸ்தகங்களைத் திருப்பித்தராத அவனது குணம் தெரிந்து மனம் சலித்துப் பிறகு புஸ்தகங்கள்தர மறுப்பினோ, அதுமுதல் அவனுடைய அன்பு முறிந்துவிடுகிறது. பிறகு அவன் அன்னிய மனிதன்போல் மாறிவிடுகிறான். நம்மிடம் ஓயாமல் வந்துகொண்டிருந்ததும் நின்று விடு

---

இலக்குவைத்த முயற்சியினிடத்துக்கு எப்படியும் போகத் துணிந்த நடைகொள்.

கிறது. இவ்விதமே நமது கையில் பொருள் குறைந்ததும் நம்மை நெருங்கி உறவாடுவோரின் அன்பும் மறைந்து விடுகிறது. இந்த மூன்று வகையான அன்பினுள் எந்த அன்பைப் பின்பற்றியாயினும் நியாயத்திற்கு விரோதமாக நாம் நடக்கவொண்ணாது.

ஃ

எவ்வளவு அன்பு பெருகி நிற்பினும் நியாயத்தையே நாம் முதன்மையாகக் கருதவேண்டும். நமது குழந்தைகளின் பிற்காலத்திற்கென்று சில நூல்களைப் பத்திரப்படுத்தி வைக்கிறோம். அவற்றை மற்றொரு நண்பர் மிகமிக விரும்பிக் கேட்கிறார். அவரிடமும் நாம் பூரண அன்பையே கொண்டுள்ளோம். ஆயினும், நியாயப்படி நாம் கொண்டுள்ள பெற்றோரது ஸ்தானத்தின் கடமையை நினைக்குங்கால், முதல் பாத்தியதையை நம்மை நம்பிய நமது குழந்தைகளுக்கே கொடுக்கவேண்டி வருகிறது. இதனால் நமது நண்பரின் அபீஷ்டத்தை மறுக்க நேர்கிறதாயினும் அதில் தவறு இல்லை. தனக்குக் கண்டு பின் மிஞ்சியதையே தானமாக வழங்க வேண்டுமென்பது நீதி. ஒருவன் தன் தாய் பசித்திருக்க, மற்றவர்கட்குப் பாயச விருந்து படைத்தல் பொருந்துமா? இது அன்பாற் செய்வதாயினும், தாயை முதலிற் கவனிப்பதன்றோ நியாயம்? தான் இச்சித்த ஸ்திரீயை அலங்கரிப்பதற்காகத் தன் மனைவியின் ஆபரணங்களை அபகரித்துச் செல்லுகல் தக்கதாகுமோ? அந்தப் பிறநங்கையிடத்துள்ள அன்புபற்றியே இது செய்வதாயினும் நியாய தேவதை இதற்கு ஒப்பமுடியுமா? நான் ஒருவனிடத்தில் அபாரமான அன்பு கொண்டுள்ளேன். அந்த மனிதன் ஒரு துராகிருத காரியத்திற்கு உடன்படச் சொன்னால் அன்புக்காக நான் உடன்படுவதா? என் வயிற்றுக்கு உணவு தருபவரென்று என் எஜமானரிடத்தில் எனக்கு அளவு கடந்த அன்பு உண்டு. அவர் ஒரு தப்புக்கடிதம் வரையும்படியும், ஒரு பொய்க்கணக்கு எழுதும்படியும் என்னை வற்புறுத்தினால் நான் செய்வதா? ஒருவன் ஒரு யுவதியோடு ஸகோதர வாத்ஸல்யத்துடன் பழகிக் கொண்டிருக்கிறான். இருவருள்ளும் எவ்வளவோ சம்பாஷணைகளும் கடிதங்களும் நடக்கின்றன. இதனை வேறொரு நண்பன் கவனித்து விட்டுத் தானும் அந்த யுவதியுடன் பழகுவதற்காக ஒருகடிதம் வரைந்து அதைக்கொண்டுபோய் அந்த யுவதியிடம் தருமாறு தன் நேசனை அவனிடம் கூறினால் அதற்கு அவன் இணங்கலாமா? கற்புலக்ஷண உத்தமியான அந்த யுவதியிடம் ஒரு அன்னிய ஆடவனின் கடிதத்

---

ஒருதாம் நம்பிக்கைக்குத் துரோகமாய்ச் சொன்ன கெடுவில் தராமல் வெகுநாட்பட்டு வேலையை முடித்துக்கொடுப்பவனிடம் பிறகு என்றைக்கும் உன் வேலைகளைச் செய்யும்படி தராதே.

தைத் தருவதா? என் நண்பன் பெரிய உபகாரிதான்; எனக்காகத் தன் உயிரையே கொடுத்தவன் தான்; அவன்வேறு நான் வேறல்ல; அதனால், அந்த அன்பால், நியாய விரோதமாக நான் போவதா? இங்கு மனசாக்ஷிக்கும் அன்புக்கும் சண்டை வந்துவிடுகின்றதன்றோ? ஒருவன் அன்பு காரணமாகத் தவறான காரியத்தைச் செய்யத் துணிகையில் அவன் மனசாக்ஷி அது தக்கதன்றென எதிர்க்கின்றது. மனசாக்ஷியுடன் இசைந்த அன்புதான் ஒழுங்கான அன்பு. அது ஒன்றே நியாயத்தின் எல்லையை மீறிச் செல்லாதது. மனதோடு இசைந்த அன்போ மனம்போன போக்கெல்லாம் சேல்லவைக்கும். தான் செய்வது தவறு என்பதைக்கூட அது அறியாத தாகிவிடும். ஆகவே, மன அன்பு உண்மையான அன்பின் லக்ஷணங்களைக் கொண்டதல்ல. அஞ்ஞானத்திலேயே அது சுழன்று கெடுவதாகும்; பல பல தவறுகள் செய்வதுமாகும்.

ஃ

ஒருவன் தன் மனைவி மக்களிடத்து வைத்த அன்பினால் உலகை வஞ்சித்தும், நியாய விரோதமாக நடந்தும், அக்கிரமங்களில் கைநனைத்தும் பொருள் சேர்த்து வைக்கின்றான். இந்த அன்பு கடவுள் ஒப்ப முடிந்த அன்பாகுமோ? தன் இறுதிக்காலத்தில் பஞ்சபாண்டவர்களைத் தனது ஸகோதரர்களென்று கர்னன் அறிந்து அன்பு பாராட்டினானேனும், தன்னை முற்றும் நம்பியிருந்த துரியோதனன் சார்பிலிருந்து போர் புரிவதே நியாயமென்று கருதி அவ்விதமே நடந்தான். தசரதர் கைகேசியினிடத்துப் பூரண அன்பு கொண்டிருப்பினும், பரதன் நாடாள வேண்டுமென்பதை அவர் ஏற்றுக்கொள்ளவில்லை. மூத்த குமாரனாகிய இராமனே பட்டத்திற் குரியவனென்று கைகேசியுடன வாதிட்டு மூர்ச்சையாயினார். தான் அன்புவைத்த நாடு, மனைவி, குமாரன்—அனைத்தும் இழந்த காலத்தும், தன் சத்திய நியாயமே பெரிதெனக் கொண்டனன் அரிச்சந்திரபூபாலன். எனவே, அன்பிலும் நியாயமே பெரிது.

ஃ

வனத்தில் தமயந்தியை நளன் தனியே விட்டுச் சென்றது நியாயமல்ல தான். ஆயினும், தன்னுடன் வந்து கஷ்டப்படலாகாதென்ற பரிசுத்த அன்பினால் நாயகியை விட்டுப் பிரிந்ததும் ஒரு விதத்தில் நியாயமாகவே ஒப்ப முடிகின்றது. அர்ச்சுனனின் உலகபாசமனைத்தும் குமாரனாகிய அபிமன்யூவிடத்திலேயே நிலைத்து நின்றது. அர்ச்சுனனிடத்துப் பூரண அன்பு மிகுந்துள்ள

---

கடும்மலை ஏறத்திட உள்ளம் வேண்டும். மலைக்குமட்டுமல்ல; மற்றவைகட்கும கூடத்தான். நெஞ்சுதுணிந்தால் எதுவும் சுலபமாகும்.

ஸ்ரீ கிருஷ்ணபகவான் அபிமன்யூவைக் காக்கத் திருவுளம்பற்றியிருப் பின் அகியாய மாணம் அவனுக்கு நேர்ந்திராது. ஸ்ரீ கிருஷ்ணபக வான் அவ்வாறு செய்யாமற் போனது நியாய மல்லதான். எனி னும், ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் நோக்கம் பாசபந்தங்களை வேர றக் களைவதேயாதலின், அர்ச்சுனனிடத்திருந்த அவ்வொரு உலக பாசத்தையும் அறுத்து விட்டதும் நியாயமேதான். பகவான் எவ ரிடத்து மிக்க அன்பு கொள்கின்றாரோ அவரிடத்துள்ளவற்றை யெல்லாம் அபகரித்துக்கொள்வதே நாம் காணும் சங்கதி. அதுவும் ஒரு பரிசுத்த அன்புபற்றியே தான். அன்பு பெரிதா?—நியாயம் பெரிதா?—என்ற பிரசினையில், இரண்டும் பரிசுத்தமாயிருக்கும் வரை யில் இரண்டும் பெரிதேதான். அன்பில் நியாயமும், நியாயத்தில் அன் பாகிய இரக்கமும் கலந்து செல்வதே தக்கது. நியாயத்தின்படியே ஒருவனை சிக்ஷிக்கையில் அங்கு அன்பாகிய இரக்கமும் உணர்த்தப் படவேண்டும். அவ்விதமே, அன்புகொண்டு ஒரு காரியம் செய்கை யில், அது நியாயத்திற்கும் பொருந்தியதாகவேண்டும். ஸ்வயநலம் அற்றதாய், தவறு இல்லாததாயுள்ள நிஷ்களங்கமான அன்பும் நியாயமும் கடவுளின் அம்ஸங்களென்று உணர்ந்துகொண்டு அவற்றிற்கேற்ப ஸன்மார்க்கம்பற்றி நடந்து கொள்ளக்கடவோம்.

## நூலாசிரியர்களும் நூல்களை வெளியிடுவோரும்.

பிறர் எழுதிய நூல்களை வெளியிடுவோருக்குப் பிரசுர கர்த்தர்கள், பப்ளிஷர்கள் என்று பெயர். இந்தப் பப்ளி ஷர்கள் நூலாசிரியர்களிடம் ஒரு நூலை விலைக்குப் பெற்று வெளியிடுவதில், அந்த நூலாசிரியர்களுக்குச் சரிவரப் பணத்தைக் கொடுப்பதில்லையென்ற புகார்தான் எங்கும் அதிகம். புஸ்தகங்களை வெளியிடும் பப்ளிஷர்கள் நூலா சிரியர்களை ஏமாற்றிவிடும் சங்கதியே மிகுதி. இதனால் முதலில் வெகு நட்பும் அன்புமாக இருந்த நூலாசிரியர்கள் மிகுந்த மோசம்போய்ப் புண் மனதாகிப் புஸ்தகம் வெளி யிட்டோர்மீது ஆத்திரமும் கோபமும் கொண்டு அவர்க ளின் வஞ்சக நடத்தையை அருவருப்பர். உள் ரகசியம் இவ்வாறிருப்பினும் புஸ்தகத்தை வெளியிடும் பப்ளிஷர்கள் அந்த நூல் விலையாவதற்காக இன்னார் இயற்றிய நூல் என்று பிரமாதமாக ஆசிரியர்களை ஆகாயத்திலே உயர்த்திப் புகழ்ந்து விளம்பரம் செய்வார்கள். இவ்விதம் சிலாகிப்பது அன்பாலல்ல; புஸ்தகம் விலையாவதற்கேதான்.

# பத்திரிகை ஆராய்ச்சி.

பலியிடுவதைப் பற்றி :—

மைசூர் ஜனப் எஸ். அப்துல் மஜீத் என்பவரது வாக்கு :—கடவுள் மாமிசத்தையோ, இரத்தத்தையோ விரும்பவில்லை யென்றும், அவர் உண்மையான பக்தியைத்தான் விரும்புகிறார் என்றும் குர்ஆனில் சொல்லப்பட்டிருக்கிறது. ஒருவருடைய உள்ளத்தை ஆராய்ந்து அறியக் கூடிய சக்தி அந்த இறைவன் ஒருவனுக்குத்தான் உண்டு. பலியிடுதல் முதலியவை புறச்செய்கைகளையே காட்டுகின்றன. பலியிடப்பட்ட மிருகத்தின் மாமிசத்தை ஏழைகளுக்குக் கொடுக்கிறோம். அதற்குப் பதிலாக, பலியிடுவதற்காக மிருகங்களை வாங்கும் பணத்தை ஏழைகளின் நன்மைக்கான வேறு துறையில் செலவழித்தாலும் ஏழைகளுக்கு உதவி செய்த லென்னும் நோக்கம் நிறைவேறுமற் போவதில்லை. ஹிந்து சகோதரர்களின் மனம் புண்படாமலிருப்பதற்காகவேனும் முஸ்லிம்கள் பசுக்களைப் பலி யிடுவதை நிறுத்தி விடலாம்.

"தமிழ் நேசன்"

ஃ

வதப்பு வாதத்தின் கேடு :—

மைசூர் திவான் ஸர் மிர்ஸா இஸ்மேல் அவர்களின் வாக்கு :—ஒரு சமூகத்தைச் சேர்ந்தவர்கள் தங்கள் சமூகத்தின் கல்வி, பொருளாதார அபிவிர்த்திகளுக்காகவும், சமூக ஒற்றுமையை உற்பத்தி செய்து கொள்ளவும் மகாநாடுகள் நடத்துவது விரும்பத் தகுந்ததுதான். ஆனல், சமூகத்தின் தற்காப்புக்கென்று சொல்லிக்கொண்டு, ஜன சமூதாயத்தின் வேறெந்தப் பிரிவு அல்லது வகுப்பினிடம் விரோதப் பான்மை கொண்டோ, அல்லது, தங்கள் சமூகம் தனித்து, மற்ற சமூகங்களினின்றும் வேறு பட்டதாய் இருந்துவர வேண்டு மென்ற எண்ணங் கொண்டோ, தனித்தனி ஜாதி சமூகங்கள் தனித்தனி மகா நாடுகளை நடத்த முற்படுவ தென்றால், அத்தகைய மகாநாடுகளால் எவரும் பயன் பெற மாட்டார்கள்**** தன்னுடைய சொந்த நன்மையையே பெரிதாக நினைத்து அத்துடன் திருப்தி யடைந்து விடும் ஒரு சமூகம் ஒருக்காலும் முன்னேற முடியாது.**** தனித்தனி வகுப்பாகப் பிரிந்து நிற்பது மதத்தின் ஒரு அம்சம் என்று நினைக்கும் வழக்கம் கைவிடப்பட்டாலன்றி நமக்குக் கதி மோக்ஷமேயில்லை.

ஃ

வெற்றிலைப் பாக்குக்கடை :—

கடையில் வியாபாரம் செய்வது பெண்களாயிருந்தால் அவர்கள் கடையில்தான் அதிக வியாபாரம் நடக்குமென்று ஒரு நிருபர் "ஸ்டேட்ஸ்மன்" பத்திரிகையில் வர்ணித்துள்ளார். அவற்றில் ஒரு குறிப்பை இங்கு தருகிறோம். "வெற்றிலைப் பாக்குக் கடைக்காரிக்கு அதிக முதல் வேண்டியதில்லை. அவளுடைய வசீகரமான தன்மையானது அவளுக்குப் பெரிய சிபாரிசாக இருக்கிறது.*** அவள் சுத்தமாக இருக்கிறாள். தூய்மையான வெள்ளைப் புடவையையும் அவள் உடுத்தியிருக்கிறாள். தலைமயிருக்கு எண்ணெயிட்டுச் சீவிப் பின்னல்

---

உன் ஜீவியப் பிரயாணத்துக்குத் தக்கபடி உன் கல்வியைச் சித்தம் செய்துகொள். இன்புற ஒரு கல்வி. ஜீவிக்க ஒரு கல்வி.

கொண்டை போட்டுக் கொள்ளு கிறாள். அவளுடைய கண்களும் வசீகரமாக இருக்கின்றன. சில சமயங் களில் அவள் மையுமிட்டுக் கொள் கிறாள். ஒரு பக்கத்து மூக்கில் மூக் குத்தி பிரகாசிக்கிறது. அவளுடைய கைகளில் நகைகள் இருக்கின்றன. கால்களுக்கும் கைகளுக்கும் அவள் மருதானியுமிட்டிருக்கிறாள். அவள் மனித சுபாவத்தை நன்கறிந்திருப்ப தால் இவ்விதம் அலங்காரமாக வருகி றாள். தொழில் நடக்க வேண்டு மானால் தான வசீகரமாக இருக்க வேண்டு மென்பது அவளுக்குத் தெரிந்திருக்கிறது. ஆகையால், அதற் காக எவ்வளவு செலவு செய்யவும் அவள் பின்வாங்குவதில்லை.*** அவ ளைப் பார்த்ததும் வழியில் செல்வோர் மயங்கி விடுகிறார்கள் ***கண்ணடி யும், புன்சிரிப்பும், அவள் தலையைச் சிறிது அசைத்தலும் மந்திர சக்தி யைப்போல் வேலை செய்கின்றன. வழியிற் செல்வோர் அவளது அழகில் மயங்கி வெற்றிலைப் பாக்குக்காக வரு வதுபோல் வருகிறார்கள். அவள் அவர்களைப் பார்க்காததுபோல் மற் றொருபக்கத்தை நோக்கியிருக்கிறாள். ***பிறகு அவள் கைலாகவத்துட னும், புன்சிரிப்புடனும் அவர்களுக்கு வேண்டியதைக் கொடுக்கிறாள். ஒரு கேள்வி—ஒரு பதில்—ஒரு தமாஷ்— இவற்றிலே சம்பாஷணை ரஸமான தாகிவிடுகிறது. இயற்கையான ஸ்திரீ யின் தன்மைக்குமுன், ஆண்பிள்ளைக ளான வெற்றிலைப்பாக்குக் கடைக்கா ரர்கள் போட்டிபோட முடிகிறதில்லை.

ஃ

மதத்தின் அவசியம் :—

நமது பாரமார்த்திக உணர்ச்சி யைச் சரிப்படுத்திக் கொள்ளு கிறோமா, அல்லது ஒழுக்க சீர் கேட்டை யடைந்து வருகிறோமா? **பகிரங்கமாகவும் அந்தரங்கத்திலும் கண்ணியமான உணர்ச்சி இருக்க வேண்டு மென்பது அடியுடன் புறக்க ணிக்கப்படுவதுபற்றி வருந்தாமலிருப் பதற்கில்லை. தேச வாழ்க்கையை ஸ்திரப்படுத்தி சீர்பாடடையும்படி செய்யக் கூடியது மதம் ஒன்றுதான்.

—சேம்ஸ்போர்ட் பிஷப்.

## பழயநாள் வாசனை விடாது.

முன்பு சிறுவியாபாரியா யிருந்தபோது சமயம் வந்த காலத்திலெல்லாம் கபடமாய் மோசமாய் நடந்துவந்திருப் பின், இப்போதுதொடங்கியுள்ள பெரிய வியாபாரத்தில் சில நாட்களுக்குமட்டுமே யோக்கியமும் நாணயமுமா யிருக்க முடியும். பிறகு மறுபடியம் பழயநாள் வாசனை விடாது பற்றிக்கொள்ள, மீண்டும் முன்போல் கபடமும் நாணயக்குறைவும் மோசமுமாய் நடக்கத் தானே தூண்டு தல் தோன்றிவிடும். எவ்வளவுதான் ஒழுங்காக நடக்க முயன்றாலும், பழய செயலின் துர்வாசனை அடிக்கடி அவனைத் தப்புவழியிற் கொண்டுபோகவே பார்க்கும். இத் தூண்டுதலுக்குத் தப்புவது வெகு கஷ்டம்.

# சிறுமணித்திரள்



(58-ம் பக்கத் தொடர்ச்சி.)

978. ஒரு குடும்பத்திலோ அல்லது ஒரு ஜன சமூகத்தினிடத்திலோ விரோதம், அசத்தியம், பொறாமை போன்ற துன்மார்க்கங்கள் காணப்படுமாயின், அக்குடும்பமும் சமூகமும் நசித்தே விடுகின்றன.

979. சகல நீதிகளையும் ஒன்று திரட்டிக் கடைந்து அவற்றின் சாரத்தை எடுப்போமாயின், மனித குலத்தின் நன்மைக்காக இடைவிடாது தொண்டு செய்வதே மிக மேலான சன்மார்க்க நியமம் என்று அறிந்துகொள்வோம்.

980. நாம் சம்பளத்திற்கு வேலை செய்யும் இடங்களில் இயந்திரத்தைப் போல நடந்து காரியங்கள் செய்ய வேண்டியிருப்பதால் சன்மார்க்கம் என்னும் பேச்சுக்கே அநேகமாக இடமில்லாமற் போகின்றது. நமது எஜமான் பொய்க்கணக்கு எழுதச்சொன்னாலும் நாம் எழுதவே நேர்கிறது. ஜீவன ஆத்திரம் அப்படிச் செய்ய வைக்கிறது.

981. நாம் எண்ணித் துணிந்து செய்யும் கருமங்களையே சன்மார்க்கச் செயல்கள் என்று கூறவேண்டும். தப்புவழிக்கு இணங்காதவன் என்று பிறர் நம்மை யறிந்துகொள்ளும் போது அவர்களும் நம்மைத் தப்பு வழிக்கு இழுக்காது விலகி விடுகிறார்கள்.

982. எந்த மனிதன் தன் விவேகத்தையும், புத்தியையும் உபயோகப் படுத்தாமல், ஆற்று வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்படும் துரும்பைப்போல், உலகம் போகும் வழியில் தானும் போய்க்கொண்டிருக்கிறானே, அவன் நீதிநெறி இது வென்பதாக எவ்வாறு அறிதல் கூடும்?

983. இவ்வுலகில் அவ்வப்போது தோன்றும் ஒரு சிலர் பரோபகார நோக்கங்கொண்டு உலகப் போக்குக்கும், பழைய வழக்கத்துக்கும் மாறாகக் காரியம் செய்கிறார்கள். இத்தகையோர் உலகின் வீர புருஷர்களாவார்.

984. ஒரு காரியம் நீதி தர்மத்துக்குப் பொருந்தியதா அல்லவா என்பது காரியம் செய்பவனின் உள் நோக்கத்தையே பெரிதும் பொறுத்ததாகும்.

985. சன்மார்க்கத் துறையில் செல்ல விரும்பும் ஒருவன் தன் காரியங்களின் பயன்களைக் குறித்துச் சிந்தனைசெய்தல் கூடாது. எது நேரினும் சன்மார்க்கமே உறுதியாதல்வேண்டும்

986. ஒவ்வொரு காரியமும் செய்யப் புகும்போது அது நற்காரியமா, அதைச் செய்வதில் நமது நோக்கம் பரிசுத்தமானதா என்னும் இரண்டு விஷயங்களை மட்டுமே கவனிக்க வேண்டும்.

987. காரியங்களின் பலன்கள் மீது நமக்கு எவ்வித அதிகாரமுமில்லை அவ்வதிகாரம் ஈசுவரன் ஒருவனுக்கே உண்டு.

988. பயம் காரணமாகவோ, கட்டாயத்தின் பேரிலோ செய்யப்படும்

காரியங்கள் சன்மார்க்கச் செயல்கள் ஆகமாட்டா. சிறிதேனும் சுயநலக் கலப்புள்ள எந்தக் காரியமும் சன்மார்க்கத்துக்கு உகந்ததாகமாட்டாது.

989. உலக வாழ்க்கையில் முன்னுக்கு வருவதற்கு, வாக்கு-நாணயம். யோக்கியதை ஒரு சிறந்த உபாயம்.

990. சுயநல நோக்கத்துடன் செய்யப்படும் அன்பு உண்மையில் அன்பே யன்று.

991. இறைவனுக்காகவே இறைவனிடம் அன்பு செலுத்துவார்கள். சன்மார்க்கத்திற்காகவே சன்மார்க்கத்தைக் கடைப்பிடித்தலே உயரிய நெறியாகும்.

992. தீய செயல்களால் நமக்கே லாபம் கிடைப்பதாயிருந்தால் கூட மனதிற்குள் அவை கெட்ட காரியங்கள் என்பதை நாம் உணர்ந்தே இருக்கிறோம்.

993. சன்மார்க்கமும் நமது சொந்த விருப்பமும் பல சந்தர்ப்பங்களில் தவறி விடுகின்றன.

994. அன்பு செலுத்துதல் நல்ல காரியம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால், அன்பு செலுத்தும் முறை சன்மார்க்க வரம்புக் குட்பட்டிராவிடின் அன்பே விஷமாகி விடுகிறது. அன்பால் கற்பின் எல்லைதாண்டி மீறிவிடவும் காண்கிறோம்.

995. தீரத்துடனும், தன்னல மறுப்புடனும் சன்மார்க்க நியமங்களைப் பரிசீலனை செய்வதில் ஈடு பட்டுத் தம் வாணாளை அதிலேயே செலவிட்ட பண்டிதர் ஒருவரை நாம் இது வரை கண்டதில்லை.

996. ஒருவன் துன்மார்க்கச் செயல்கள் புரியும்போது தன் மனதிற்குள் தான் தீயன செய்வதாக உணர்ந்தே யிருக்கிறான். பொய் எக்காலத்தும் மெய்யாகி விடாது.

997. இவ்வுலகில் சைத்தானே நேரில் உருவெடுத்து வந்து துவேஷத்தையும், பொய்யையும் பரப்பிய போதிலும், நீதியையும் சத்தியத்தையும் விரட்டிவிட முடியாது.

998. பிறருக்குச் சிறிது தீங்கிழைப்பதால் நமக்குப் பெரு நன்மை விளைவதாயிருந்தாலும் நாம் அவ்வாறு தீங்கிழைத்தல் கூடாது.

999. தீய செயலால் நமக்கு வரும் நன்மை உண்மையில் நன்மையே யன்று; நன்மை உருத்தாங்கிய தீமையேயாகும்.

1000. சன்மார்க்கம் என்னும் விதைக்குச் சமயம் என்னும் நீர் பாய்ச்சினாலன்றி அவ்விதைவிலிருந்து முளை கிளம்பாது.

1001. சன்மார்க்கம் என்னும் அடிப்படை தகர்க்கப்பட்ட தட்சணமே சமயம் என்னும் மாளிகை கீழே விழுந்து மண்ணோடு மண்ணாகி விடும்.

1002. சாந்தம் அல்லது தாழ்மைக் குணம் சன்மார்க்கத்தின் முதற் படியாகும்.

1003. விபசாரம் செய்வோர் அற்பாயுளில் மாண்டு போகிறார்கள். என்று டார்வின் நிருபித்திருக்கிறார்.

1004. விபசாரம் செய்வோரின் அறிவும் நாளுக்கு நாள் க்ஷீணித்து முடிவில் அவர்கள் பித்தர்கள் போல ஆகின்றனர்.

1005. மக்கட் குலம் நிலைபெற்று வாழ்வது அதனுடைய பொருட் செல்வத்தையோ, சைன்ய பலத்தையோ பொறுத்ததன்று. சன்மார்க்கம் என்னும் அடிப்படையின் மீதே அது மேன்மையுடன் வாழ முடியும்.

P. G. குலசேகரன்,
"மனோரஞ்சினி விலாஸ்"

## "அமிர்தினி"யின் உயர்வு.

அ—என்பவன் "அமிர்த குணபோதினி" உனக்கு வருகிறதா என்றான்.

ஆ—என்பவன் ஆறுண்டுகளாகத் தருவிக்கிறேன் என்றான்

இ—என்பவன் இகபரங்களுக்கு சாதகமான ஞானக் களஞ்சியம் என்றான்.

ஈ—என்பவன் ஈச்வர பக்தி முதலிய ஸத்விஷயங்கள் நிறைந்தது என்றான்.

உ—என்பவன் உலக சுபாவத்தை நன்கு உணரச்செய்வதில் நிகரற்றது என்றான்.

ஊ—என்பவன் ஊற்று போல் ஞானத்தை உள்ளத்தில் பெருகவைப்பது என்றான்.

எ—என்பவன் எம்மதத்தினரும் களிகூர்ந்து பெறத்தக்கது என்றான்.

ஏ—என்பவன் ஏழாவது ஆண்டு பிறந்துவிட்டது என்றான்.

ஐ—என்பவன் ஐயங்களைப் போக்கித் தெளிவு தருவது என்றான்.

ஒ—என்பவன் ஒரே ரூபாய் சந்தா என்றான்.

ஓ—என்பவன் ஓராண்டு சந்தாவை இன்றே மணியாடர் செய்கிறேன் என்றான்.

ஔ—என்பவன் ஔவையார் போன்ற பெரியோர்களின் ஆசி பெறுதற்கு "அமிர்த குணபோதினி"யே சிறந்தது என்று மகிழ்வுடன் கூறினான்.

B. ஸ்ரீநிவாஸ மூர்த்தி ராவ்.

இரங்கூன் நகர வாழ்க்கை:—

இரங்கூனில் ஒவ்வொரு வீடும் 12-முதல் 36 அறைகள் வரைகொண்டது. ஒவ்வொரு அறையும் 5-அல்லது 6-அடி அகலமும் 40-அடி நீளமுமுள்ளதாய் புறாக்கூடுகள் போல் பலகைகளாலும் துத்தநாகத்தகடுகளாலும் தடுக்கப் பட்டிருக்கின்றன. இந்த மாதிரி அறை யொன்றுக்கு 25-முதல் ரூபா 40-வரையில் மாதம் ஒன்றுக்கு வாடகையாகும். இந்நகரில் ஜீவிக்க வருவோர் குடும்பங்களுடன் வருவதில்லை. இவர்கள் இந்தப் புறாக்கூடுகளிலே 10, 15 ஆக அடைந்திருக்கிறார்கள். இந்நகரில் கிடைக்கும் வருமானத்தில் முக்கால் பங்கு வீட்டு வாடகைக்கும், பால் மோருக்குமே சரியாகி விடும். கையில் பணமில்லாவிடில் கவனிப்பாரில்லை. வயிறுகாய வேண்டியதே. தெருக்களில் 100-க்கு 2-பர்மியர்களும், 3-சீனர்களும், ஜப்பானியர்களும், 5-பாபுக்களும், 10-இந்திய மகம்மதியர்களும், 10-சூரத்துக்காரர்களும், 10-இந்துஸ்தானிகளும், 10-வங்காளிகளும், 10-சிட்டகோனியர்களும், 20-தென்னிந்தியர்களும், 20—ஆந்திரர்களுமாய்த் தென்படுவார்கள். பர்மியர்களைத் தெருக்களில் அதிகமாய்ப் பார்க்க முடியாது. ரங்கூனுக்கு வந்ததும் எவரும் வேலைக்காக முடியெடுக்க வேண்டுமாம்! இவ்விடம் வந்து ஒரு தொழில் கிடைத்ததும் பரஸ்திரீயை வைத்துக் கொள்கிறார்களாம். பர்மிய ஸ்திரீகள் பிறமதஸ்தர்களைக் கல்யாணம் செய்துகொண்டு புருஷர்களின் மதங்களை அனுஸரிப்பினும், உடைகளை மட்டும் மாற்றுவதில்லையாம்: அசல் பர்மியர்களோ நிரம்பவும் சாதுக்களாயும், ஈவிரக்கமுள்ளவர்களாயும், பிறஜாதி ஸ்திரீகளிடத்தில் இச்சையின்றி இன்ப நுகர்ச்சியில் ஒருவிதக் கட்டுப்பாட்டுடன் இருக்கிறார்கள்.




## செல்வியர் வேண்டும் செல்வப் பொருள்கள்.

---

பல்லவி.

கல்வி வேண்டும் கல்வி வேண்டும் கல்வி வேண்டுமே
செல்வி யான வெங்க ளுக்குக் கல்வி வேண்டுமே (கல்)

அநுபல்லவி.

செல்வம் வேண்டிடோம்—பெருஞ்—சீர்கள் வேண்டிடோம்
நல் விவேக மேவு ஞானம் நாளும் வேண்டுவோம் (கல்)

கண்ணிகள்.

1. அணிகள் வேண்டிடோம்—நவ—மணிகள் வேண்டிடோம்
கணித மோடு பாக நூல்கள் கருதி வேண்டுவோம் (கல்)

2. பட்டு வேண்டிடோம்— குழற்—கட்டு வேண்டிடோம்
செட்டு டன்இ ருக்கும் வாழ்க்கை தினமும் வேண்டுவோம் (கல்)

3. மச்சு வேண்டிடோம்—ரத்னக்—கச்சு வேண்டிடோம்
குச்சு வீட்டில் வாழி னும்நற் குணங்கள் வேண்டுவோம் (கல்)

4. முத்து வேண்டிடோம்—மூக்கு—நத்து வேண்டிடோம்
சுத்தமான வாழ்க்கை தன்னை நித்தம் வேண்டுவோம் (கல்)

5. தண்டை வேண்டிடோம்—சரிகைக்—கெண்டை வேண்டிடோம்
பண்டை நல்ல வர்கள் சென்ற பாதை வேண்டுவோம் (கல்)

6. சேணம் வேண்டிடோம்—ஒட்டி—யாணம் வேண்டிடோம்
"நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு" நான்கும் வேண்டுவோம் (கல்)

7. வங்கி வேண்டிடோம்—சரிகை—அங்கி வேண்டிடோம்
மங்கி டாத நற்பு கழ்ச்சி வாங்க வேண்டுவோம் (கல்)

கணியூர் P. S. M. E. முஹம்மது யாக்கூப்.

☞ சிறுமிகளை இரவில் வீட்டில் வாசிக்கும்படிசெய்து, அவர்களின் பாடங்களைப் பெற்றோர்கள் கருத்தாய்க் கேட்டுப் பள்ளிக்கூடத்தில் குறித்துள்ள பாடங்களைவிட அதிகமாய் நாலைந்து பாடங்களை அவர்கள் தெரிந்திருக்கும்

படி செய்யவேண்டும். அதிகாலையில் நான்கு மணிக்கு எழுப்பி வாசிக்கப் பழக்கவேண்டும். அவர்கள் படித்துக்கொண்டிருக்கும்பொழுது வீட்டு வேலைகள் செய்வதற்கு ஏவுதல் கூடாது. வாசித்து முடிந்தபின் அவர்களுக்கு வீட்டு வேலைகள் இடுதல் நன்று. இல்லாவிடில் அவர்களின் படிப்பு கெட்டு விடும். பாடசாலையினின்று வந்தபின் வீட்டில் வாசியாமலே மறுநாள் புஸ்த கச் சுமைதாங்கிப் பள்ளிக்கூடம் செல்வதில் ஒரு பயனுமில்லை. அது படிப்பு மல்ல. இது சிறு விஷயமாயினும்—இது முக்கிய சங்கதியாகும்.

## நமது சிறிய தம்பி.

பால்குடிக்கும் குழந்தையான நமது சிறிய தம்பி நம்மை எவ்வளவோ தொந்தரைப்படுத்துகிறான். நாம் வெளி யிற் சென்றால் தானும் வருவதாக அழுகிறான். என்னைத் தூக்கிக்கொண்டு போகவேண்டாம், நான் நடந்து வருகி றேன் என்கிறான். அவன் கால்கள் நோகுமேயென்று நாம் தான் அவனைத் தூக்கிச்செல்ல முயலுகிறோம். நாம் தூர வரும்போதே அவன் வீட்டிலிருந்தும் ஓடிவந்து வீதியில் நம்மைக் கட்டிப்பிடித்துக்கொள்ளுகிறான். நாம் உட்கார்ந்து கொண்டிருந்தால் நமது மடியின்மேல் ஆசையோடும் ஏறிக் கொள்கிறான். நமக்கு முத்தம் கொடுக்கிறான். தன் கையி லுள்ள பக்ஷணத்தை நமக்குத் தருகிறான். நாம் புசிக்கப் போகும்போது நமக்குப் பக்கத்தில் உட்கார்ந்துகொள்ளுகி றான். நமது பக்கத்தில் படுத்துத் தூங்குகிறான். தன்னைத் தொட்டிலில் போட்டு ஆட்டுமாறு அதிகாரம் செய்கிறான். என்னவோ மகா வித்வான்போல நம்மிடம் பேச அடிக்கடி நெருங்கித் தனது குறிப்பான மதலைச் சொற்களைத் தெரி விக்கிறான். நம்மை அக்கா என்று மட்டும் நினைத்து நமது ஆத்மாவை நேசித்து அன்பு காட்டுகிறானே யல்லாது, நமது அழகிய ரூபத்தின்மீது இச்சைவைத்து அதற்காக நம்முடன் அவன் பேசவரவில்லை. அவன் ஹிருதயமோ பரிசுத்தமாய் அன்புமயமாய் இருக்கிறது. அவனைப் போன்று பிறஆடவர் நம்மீது களங்கமற்று அன்பு பாராட் டினால், அப்பொழுதுதான் நாமும் அந்த அன்னிய ஆடவ ருடன் நெருங்கிப் பேசலாம்; அன்பும் வைக்கலாம். அவ் விதமில்லாத சங்கதியே அதிகமாதலின், எப்போதும் பிற ஆடவர்களிடம் தூரவிலகி நமது சகோதர சகோதரிகள் எச்சரிக்கையாக இருக்கவேண்டியதே. நமது கண்டிப்புத் தன்மையையும் அவர்கள் உணரும்படி செய்யவேண்டும்.

# கோபத்திலுள்ள விஷம்.



தங்களின் கோபத்தைத் தம்வச மாக்க இயலாது மீறி மிகவும் எளிமையான ஸ்திதிக்கு வந்திருப்போர் எண்ணிறந்தோராவர். கடுங்கோபம் பொருந்தியவர்கள் எங்குமே இகழப்படுவதையும் தூற்றப்படுவதையும் காண்கின்றோம். அன்னோர் ஒரு நல்ல ஸ்திதிக்கு வருவதற்குப் பல வருஷங்கள் முயன்றிருக்கக் கூடுமாயினும், அவ்வளவும் ஒரு க்ஷணத்தில் எழுந்த கோபாவேசத்தால் சிதறுண்டு போகின்றது. ஒரு சிறந்த சிற்பி தான் பல நாட்களாகப் பாடுபட்டுத் தயாரித்த ஒரு கற்சிலையைத் தன்னில் எழுந்த கோபத்திற்காக பழுதுறும்படி ஊனப்படுத்தி விடுவானாயின் அவனைவிடப் பைத்தியக்காரன் வேறொருவனுண்டோ? தன் கோபத்தினால் தன் வேலையை இழந்தோரும் பலர். ஒரு சிறு அவதூறுக்காக எவன் மிக்க சினங்கொண்டு தலைகால் தெரியாமல் குதிக்கிறானோ, எவன் ஒவ்வொன்றுக்கும் தன் மீதே குற்றம் கண்டு பிடிக்கிறார்களென்று கோபம் பொங்குகிறானோ—அவன் தனக்குத் தானே ஸ்திர எண்ணம் கொண்டவனாகவாவது, தன் வேலையில் நம்பிக்கையுள்ளவனாகவாவது இருக்கமாட்டான். கோபமே உருவாயுள்ள மனிதர்களிடத்தில் பிறர் ஜாக்கிரதையாயிருத்தலும் அவசியமாகிறது. ஏனெனில், சாதாரணமாகக் கூறும் ஒரு அற்ப சொல்லே அவர்களுக்குப் பெரிய கோபமூட்டுவதாக ஆகிவிடும்.

ஃ

ஒருவன் உண்மையில் கோபியாகவே யிருப்பானாயின், அவன் தன் சினத்தை யடக்குதல் கஷ்டமாகவே இருக்கும். பஞ்சேந்திரியங்களையாவது ஒரு வழியில் அடக்கிவிடலாம்; ஆனால், பழகிப்போன கோப குணத்தையடக்குவதோ மிகப் பிரயாசையாகும். பொறாமை என்பது கோப குணத்தின் முக்கிய நண்பன். பிறர் சொல்வதில் அருவருப்பு கொள்வதும் கோபத்தினாலேயே. கோபம் பொருந்தியவன் தான் நினைக்கிறபடியே பிறர் செய்யவேண்டுமென்று எண்ணுகிறான். அவ்விதம் பிறர் செய்யாவிடில் கோபம் தலைக்குமேலாகி விடுகிறது. பொதுவாகக் கோபம் அதிகம் பொருந்தியவன் கொடூரமானவனாகவும், தன்னலம் கருதுவோனாகவும், இழிவான புத்தியுடையவனாகவும், கர்வியாகவும், ஒரே க்ஷணத்தில் நேசத்தையும், உறவையும், ஸகோதரவாத்ஸல்யத்தையும் கொலைபுரிவோனாகவும் இருப்பான். அவன் தன்னைத் தவிர பிறரை நினைக்கவேமாட்டான். மற்றவருடைய சுதந்திரத்தைக் கௌரவிக்கும் புத்தியும் அவனிடமிராது.

ஃ

ஒவ்வொருவனும் தான் பிறரால் மதிக்கப்படுவோனாகவும், பிறரது மரியாதைகளுக்கு அருகனாய் சாதாரண மனிதர்களைவிட ஒருபடி உயர்ந்தவ

---

ஒவ்வொரு மதமும் அவ்வம்மதத்தினரின் லௌகிகப் பற்றுதலைக் குறைத்து, ஆண்டவன்மீது மெய்யன்புடன் கூடிய பக்தி சுரக்கச் செய்வதையே முதற் கருமமாகக் கொண்டது.

னுகவும், தாழ்ந்ததிலிருந்து விலகியவனுகவும் இருக்க விரும்பவேண்டும். அப்படி விருப்பமிருந்தால் அவன் முதலில் தன்னைத் தூயவனுக்கிக்கொள்ளல் அவசியம். எவன் தன்னை ஒரு நிதானத்தில் சமாளிக்க சக்தியில்லாதிருக்கிறனே அவன் மற்றவரை எவ்வாறு தன் வசமாக்க இயலும்? எந்த அருவருப்பான சமயத்திலும் தன்னைக் காத்துக்கொண்டும், எவ்வளவு கோபம் கொடுக்கக்கூடிய சமயத்திலும் அமைதியுடன் நடந்துகொண்டும், எவ்வித இடையூறுகளிலும் பொறுமையோடு தன்னைச் சரிப்படுத்திக்கொண்டும் செல்வோனுகிய அவனே பிறரால் மதிக்கப்படுவோனுகவும், பிறரை வெல்லும் சக்திவாய்ந்தோனுகவும் இருக்கிறன். கொடிய கோபகுணத்தால் நன்மையைக் கண்டவன் இவ்வுலகில் இதுவரையில் ஒருவனுமில்லை. கோபகுணத்தினர் ஒரு குடும்பத்தோடு சேர்ந்து வாழ்தல் மிக்க அருமையாகவே இருக்கும். அவனுக்கு நண்பர்களும் அபூர்வமே.

## நூலாசிரியர்களிடம் புஸ்தகத்தைக் காட்டாதே.

ஒரு நூலாசிரியரை நீ காணச்செல்லுகையில் அவர் பதிப்பித்த நூலை எடுத்துச்சென்று அவருக்குக் காண்பித்து அவரிடம் உனக்குள்ள பிரேமையை வெளியிட்டுக்கொள்ள எண்ணுகிறுய். உன்னுடைய எண்ணம் உத்தமமானதுதான். அவரிடம் நீ கொண்ட அன்பும் பரிசுத்தமானதே. ஆனல், அந்த நூலாசிரியரிடம் அந்தப் புஸ்தகமே இல்லாதிருக்கலாம். பெரிய பணக்காரர் வீட்டில்தான் செலவுக்கு அதிக கஷ்டமாயிருக்கும். அதுபோல நூலாசிரியரும் தான் எழுதிய நூல் தன்னிடம் இல்லாதவராக இருப்பார். படித்துவிட்டுப் பிறகு தருவதாகக் கூற, நீயும் பிரியத்தோடு கொடுத்துவிடவேண்டி வரும். சத்தியவந்தர்களான நூலாசிரியர்கள் பிறகு கொடுத்துவிடுவார்கள். தாங்கள் படித்த படிப்பு ஒருவிதமாகவும், நடத்தையோ தகாத வழியிலாகவும் உள்ள நூலாசிரியர்கள் பிறகு திருப்பிக்கோடார்கள். தருகிறேன்—தருகிறேன் என்று பிறகு உன்னை ஏமாற்றிவிடுவர். கடைசியில் நீ முட்டாளாகி உன் அரிய நூலை உன் பேதமை காரணமாக இழக்கவேண்டியதாகவே வரும். இது ஒரு பட்டறிந்த அநுபவமாதலின் எச்சரிக்கை பெறு.

சிறு பையனுயினும் சிறு பெண்ணுயினும் தோழர் தோழியருடன் குலாவி உலாவுகையிலும், கூவல்களைக் (சிறு பள்ளங்களை) குதித்துத் தாண்டுகையிலும், மரமேறி விளையாடுகையிலும், பாடசாலை தொழிற்சாலை இவற்றிற்குப் போகையிலும், தமக்குத்தெரியாமலே பலயோசனைகளை மனதில் வைத்திருப்பார்கள். அந்த யோசனைகள் பிற்கால அபிவிருத்திக்குத் துணை செய்வதாகவும் ஆகலாம்.




## 3. இல்லறம்.

(180-ம் பக்கத் தொடர்ச்சி.)

### 271. "ஒருவனுக்குத் தாரம் மற்றவனுக்குத் தாய்."

அதுதான் பெண்மக்களுக்கு அமைந்த சிறப்பு. உத்தம பத்தினியாகவும், நற்றாயாகவும் விளங்குவதற்கு மிஞ்சின சிறப்பு இவ்வுலகில் ஏது? கீழ்ப் பட்டவள் என்று தன் மனைவியைத் தாழ்த்துபவனுங்கூட, அவள் ஒரு தாயின் அந்தஸ்துக்குக் கடவுளின் அருளால் உயர்த்தப்படும்போது அவளை மகிமைப் படுத்த வேண்டியதாகவே நேரும். தன்னை இல்லறத்திற்குள் புக விட்டவள் மாதா. பிறகு அந்த இல்லறத்தை அழகுபடுத்துபவள் மனைவி. பெண்மக்களின் கௌரவ குணங்களுக்கு ஏற்பவும், பெண்மக்கள் ஒரு வீட்டில் மேன்மைப் படுவதற்கிணங்கவுமே அந்த வீட்டின் சீரும் சிறப்பும் இருக்கும். கொடிய பெண்டிராலும், அன்பு மாறிப்போன அன்னையாலும் வீட்டு மனுஷ்யன் படும் பாடு அவன் பூர்வம் செய்த வினையேபோலும். சகித்துச் செல்வதைத் தவிர வேறு வழியுங் காணலை.

### 272. "ஒருமைப்பாடில்லாத குடி ஒருமிக்கக் கெடும்."

கணவனுக்கும் மனைவிக்கும் அன்னியோன்னிய மில்லாவிடில் அந்த இல்லறம் சிறந்து விளங்குவது அரிது. மனைவியைத் துன்புறுத்திய கணவனும், கணவனைத் துன்புறுத்திய மனைவியும் சுகப்பட்டதில்லை. பிற்காலத்திலுங்கூட இந்தப் பாவம் விடாமற் சுற்றிப் பேய்போல் பிடித்துக்கொண்டு அக்கிரம் செய்தோரை வாட்டி வதைக்கின்றது. இதை விளக்குவதற்கு ஆயிரம் பக்கங்கள் வரை உதாரணங்களோடும் எழுதலாம்.

### 273. "ஒரு விரல் நொடி இடாது."

தனித்து ஒரு புருஷனோ ஒரு ஸ்திரியோ வாழமுடியாது. அதற்குத்தான் இருவரையும் சேர்த்து இல்லறச் சகடத்துள் பூட்டப்பட்டிருக்கிறது. இருவருள்ளும் காமாவஸ்தையைத் தோற்றுவித்து ஒருவர் மூலம் ஒருவருக்குச் சாந்தியாகுமாறு பரம பிதாவாகிய கடவுள் ஏற்படுத்தி இருவரையும் பூட்டும் சாவியும் போல் வைத்திருக்கிறார். ஒன்று இல்லாவிடில் மற்றொன்றாற் பயனில்லை.

### 274. "ஒழுக்கு வீட்டில் வெள்ளம் வந்தது போல."

ஏற்கெனவே வீடு மிக்கப் பழுதாய் மழைக்குத் தாங்காமல் ஒழுகிக் கொண்டிருக்கையில், அதனால் வீடு முற்றும் ஈரமாயிருக்கையில், அந்த வீட்டிற்குள்ளேயே வெள்ளமும் புகின் அவ்வீட்டின் கதி என்னாவது? உலக கஷ்

டங்களும், குடும்பத்தின் நிர்ப்பாக்கியங்களும் ஒரு துரதிர்ஷ்டத்தோடு மற்ளுெரு துரதிர்ஷ்டமுமாய்த் தொடர்வதாயிருக்கிறது. எவ்வளவு கஷ்டங்களுக்கும் கடவுளை நம்பிச் செல்லக்கடவோம். தைரியத்தை விடாமல் 'கடவுள் காப்பார்'—என்று நம்பி இருப்போம். எக்காலத்திலும் மனம் சோர்ந்து விடாதிருப்பதே பெரிய ஆண்மை. "துயருண்டோ துணிவுள்ளோர்க்கே?" என்ருர் ஸ்ரீ பாரதி. இல்லறத்தில் சோதனைகளே அதிகம், சுகம் என்பது கொஞ்சந்தானப்பா.

275. "ஒன்ருல் ஒன்று குறையில்லை, முன்னுலே கட்டத் துணியில்லை."

இதுவும் பகவான் செய்யும் கூத்துதான். ஸகல பாக்கியங்களும் தந்திருக்கிருர். வீடு வேண்டுமா, மனைவி மக்கள் வேண்டுமா, புத்தி விருத்தியும், உன்னத பதவிகளும், கௌரவமும், கீர்த்திகளும், நேசவர்க்கங்களும் எல்லாம் கடவுள் கொடுத்திருக்கிருர். ஆனல், முக்கியமாகிய செல்வத்தைச் சுருக்கி விட்டிருக்கிருர். வரும் பணம் பாதிநாளுக்குக் கூடப்போதவில்லை. பிழைப்பதற்கோ எந்த வழியும் தெரியாமல், தெரிந்த வழியிலும் விருத்தியில்லாமல், வருமானமும் போதாமல் வெகு கஷ்டமும் முழிப்பும் திகைப்புமாகி, முன்னுல் கட்டத் துணியும் இல்லாமல் கனத்த பாடும் சோதனையுமாக உள்ளது. வரவேண்டிய சம்பளமும் சரியாக வருவதில்லை. இதுவும் இல்வாழ்க்கையில் காணும் ஒரு பெரிய "சுகம்" தான்!

276. "ஓட்டைச் சட்டியானுலும் கொழுக்கட்டை வேந்தால் சரி."

இல்வாழ்வில் எதற்கும் சரி சரி யென்று சகித்து ஒரு திருப்தி செய்து கொண்டு போனுல்தான் குடித்தனத்தை நிம்மதியாக நடத்தமுடியும். சும்மா சும்மா தன் மனைவி பெண் குழந்தைகளையே பெற்றுக்கொண்டிருந்தாலும், அதற்காகக் குறைபட்டுக்கொள்ளாமல், ஆண் குழந்தைகள் பிறகு பிறக்குமென்று எண்ணி மனுே சமாதானமாகி, தான் குழந்தை குட்டிக்காரனுனதற்குச் சந்தோஷப் பட்டுக்கொண்டு அந்த திருப்தியுடன் செல்லவேண்டும். இவ்வளவாவது ஆயிற்றே யென்று ஒவ்வொன்றிலும் பொறுமைப்பட்டபடி சந்தோஷமாகவே நாட்கடலைப் போக்கவேண்டும். (தொடரும்.)

---

உலகத்தில் குற்றமில்லாதவனும், முழுதும் குற்றவாளியாகவே இருப்பவனும் ஒருபோதும் கிடையாது. ரஸபாஷாணம் தீயதேயாயினும் அது சுத்தி செய்யப்பட்டு 3000-ஜனங்களின் பிணியை நிவர்த்தித்திருக்குமானுல் அதைத் தந்தச் சிமிளில்தான் எவரும் வைத்துப் பத்திரப்படுத்துவார்கள். எவரும் அதை விரும்பிக் கேட்பார்கள். ஆனல், பாஷாணம் என்ற கெட்ட பெயர் மட்டும் அழியாமல் நிலையூன்றிப்போயிருக்கலாம். ஆனல், அது ஒரு தாழ்வாய் விடாது. தாழ்வாகக் கருதுவதும் தகாது. மாற்றன்னையர் யாவருமே கொடியவரில்லை; உபநாயகி, தாசி யாவருமே கொடியவரில்லை; தாய்மார், மனைவி, சகோதர—சகோதரிகள் என்பாரில் அனைவருமே நல்லோருமல்லர்.

---

கன்னியா யிருக்கி லுன்னழ கென்னும்?
அரைக்கி லன்ருே சந்தனங் கமழும்?

# செல்வமும் வறுமையும்.

**செல்வச் செல்வியின் மயக்கும்,**
**வறுமை நங்கையின் நற்போதமும்.**

ஆநந்த நகரில் "தெய்வச் செயல்" எனும் ஓர் மாளிகையில் செல்வம், வறுமை என்ற இரண்டு கந்தர்வ கன்னிகைகள் வசித்து வந்தனர். மூத்தவளாகிய 'செல்வம்' என்பவள் எவரும் மயங்கத்தக்க சௌந்தரியமும், சந்தோஷம் நிறைந்த முகரூபமும் உள்ளவள். அவளுடைய தங்கையாகிய 'வறுமை' யாவரும் வெறுக்கத்தக்க அந்தக்கேடுள்ளவளும், முகத்தில் ஸதா ஸஞ்சலம் நிறைந்தவளுமாயிருந்தாள். இவ்விருவரில் செல்வம் என்ற நங்கையை 'அதிர்ஷ்டன்' என்பவனும், 'துர் அதிர்ஷ்டன்' என்பவனும் மிக மிக விரும்பிக் காதல் பூத்து நின்றனர். இவ்விருவரும் ஒரு தாய் வயிற்று ஸகோதரர்களே யாயினும் ஸ்திரீ நேசத்துக்கு முன் அவர்களுடைய ஸகோதர நேசம் பறக்க எத்தனித்தது. அவர்கள் தனித்தனியே 'செல்வ' நங்கைக்குச் சகல உபசரணைகளையும் செய்து நானாவித சிநேக வார்த்தைகளையும் சொல்லி வந்தார்கள். 'செல்வ' சுந்தரியோ தன் பேரில் ஆசை மிகுந்த அவ்விருவரில் ஒருவனை யாவது தள்ளி விடாமல் ஒரு சமயத்தில் ஒருவனுக்கும், வேறொரு சமயத்தில் மற்றவனுக்கும் தன் புன்னகையைத் தெரிவித்த அன்பு காட்டி நின்றாள். அதனால் அவ்விரு ஸகோதரர்கட்கும் அவளிடம் ஆசை அதிகரித்தது. இதைக் கவனித்த 'செல்வ' நங்கை அவ்விருவரையும் நோக்கி, "என் ஸகோதரியாகிய 'வறுமை' என்பவளை விட்டு நான் வெகு காலம் பிரிந்திருப்பது கூடாத காரியமாகையால், என்னோடுகூட அவளையும் உங்கள் இருவரில் ஒருவர் ஏற்றுக்கொள்ளாத பக்ஷத்தில் நான் உங்கட்கு ஆசை நாயகியாய் இணங்கப் போவதில்லை" என்று கண்டிதமாய்த் தெரிவித்தாள். அதன்பின் இவ்விரு ஸகோதரர்களும் சீட்டு எழுதிப் போட்டு எவன் பெயருக்குச் 'செல்வம்' என்பவள் விழுகிறாளோ அவனே அவளை ஆசை நாயகியாகக் கொள்வதென்றும், மற்றவன் 'வறுமை' என்ற பெண்ணைக் கைக்கொண்டு வாழ்வதென்றும் முடிவு செய்துகொண்டு, அவ்விதமே சீட்டு எழுதிப் போட்டனர். அப்போது அதிர்ஷ்டன் என்பவன் பேருக்குச் 'செல்வம்' என்ற கன்னிகை கிடைத்தாள். 'வறுமை' என்பவள் துர் அதிர்ஷ்டன்' பேருக்கு வந்து சேர்ந்தாள். இருவரும் தங்களுக்குக் கிடைத்த பெண்ணுடன் இசைந்து வாழ முயன்றனர்.

ஃ

செல்வத்தைத் தன் கண்மணியாகப் பெற்ற 'அதிர்ஷ்டன்' அவளுடைய அதிசய ரூப லக்ஷணங்களைப் பார்த்துப் பார்த்து மதிமயங்கி விசேஷித்த ஆபரணங்களால் அவளை அலங்கரித்து உள்ளம் பூரித்தான். தன் மாளிகையில் அடிக்கடி ராஜ விருந்துகள் செய்து எங்கும் பிரஸித்த புருஷனானான். வெளிக்கு இவ்வளவு

பிரதாபம் கொண்டபோதிலும், உள்ளுக்கோ மிக்க அல்பகுண முடையவனாய் நயவஞ்சகனாகி, பந்து ஜனங்களையும் உத்தம நண்பர்களையும் அன்னியர்கள்போலப் பாவித்தும் அவமதித்தும் வந்தான். தன் உடன்பிறந்த ஸகோதரனையும் படிப்படியாய் வெறுத்துக் கடைசியில் அவனைத் தன் வீட்டுவாயிலுக்குச் சமீபமாய்க் கூட வாராதவாறு செய்துவிட்டான்.

ஃ

எவ்வளவு பெரிதான ஆறுகளும் ஏரிகளுங்கூடத் தகுந்த கரைகளினால் பாதுகாக்கப்பட்டிராவிட்டால், அவைகளில் நிறைந்துள்ள அளவற்ற ஜலமானது அதிசீக்கிரத்தில் எங்குஞ் சிதறி மறைந்துபோய்விடுவதுபோல, எவ்வளவான ஐசுவரியமும் மட்டான செலவினாலும், விவேகமான கையாடுதலினாலும் பாதுகாக்கப்படாவிட்டால் அதிசீக்கிரத்தில்தான் மாயமாய்ப் பறந்துபோய்விடுமென்பதற்குச் சந்தேகமில்லையன்றோ? சில வருஷங்களுக்குள்ளாக 'அதிர்ஷ்ட'னுடையதிரளான ஆஸ்திபாஸ்திகளெல்லாம் அவனுடைய டம்பமான நடத்தைகளினாலும், புத்தியீனமான வீண் செலவுகளினாலும் வேகமாய்க் குறைந்து கொண்டே வந்தன. அவனுடைய கவலையீனம், ஒழுங்கீனங்களினிமித்தம் அவனுடைய வியாபார விஷயங்களில் அபிவிர்த்தி யில்லாமற் போனதுந்தவிர, பெரிய நஷ்டங்களும் நேரிட்டன. இவ்வாறு தன் மதியீனமான செலவுகளினால் அவன் தோற்றுவிட்ட ஆஸ்திகளெல்லாம் போக, மீதியா யிருந்தவற்றை அவனுடைய கடன்காரர்கள்வந்து பிடித்துக்கொண்டார்கள். அப்போது அவன் முன் தன்னிடத்தில் வந்து விருந்துண்டவர்களும், வெகுமதிகளைப் பெற்றுச் சென்றவர்களுமாகிய பல சிநேகிதரிடத்துப் போய், தனக்கு நேரிட்ட ஆபத்தில் அவர்கள் உதவி செய்யவேண்டுமென்று வருந்திக் கேட்டான். அவர்களில் ஏறக்குறைய எல்லோரும் அவனை ஒரு அந்நியனைப் போல் பாவித்து அவன் விண்ணப்பத்திற்குச் செவிகொடாது மறைந்தனர். தன் வாழ்வு நாட்களில் அவன் அவமதித்து நடத்தின அவன் சிநேகிதர்களும் பந்துக்களும் இப்பொழுது அவனைப் பார்த்து நகைத்துப் பரிகாசம் செய்தனர். எல்லாவற்றிலும் விசேஷ மென்னவெனில்; அவனுடைய ஆசைநாயகியாகிய 'செல்வம்' என்பவள் அவனை நிந்திக்கவும், அவன் ஸமீபத்தில் வருகையில் தன் முகத்தைத் திருப்பிக்கொள்ளவும் துவக்கினாள். இவ்வாறு அவள் அவனை இகழ்ந்து வெறுத்துத் தள்ளத்தள்ள, அவனோ பழைய ஆசைகளோடும் அவளை அதிகமதிகமாய்க் கெஞ்சவும், தன்மீது இரக்கம் பாராட்ட வேண்டுமென்று வேண்டவும் தலைப்பட்டான். அவளுடைய மாயா ரூபத்தில் அவன் மயக்கங்கொண்டு முற்றிலும் அவளுக்கு வசியப்பட்டுப் போயிருந்ததால், அவள் அவனை எவ்வளவோ கேவலப்படுத்தியும் அவளை விட்டுப் பிரிய மனமற்றுத் தத்தளித்தான். கடைசியில் 'செல்வம்' என்பவள் அவனைவிட்டு ஓட்டம் பிடிக்கவே, அதிர்ஷ்டன் அவளைப் பரிதாபமாய்க் கெஞ்சி மன்றாடிப் பின்தொடர்ந்து ஓடினான். அப்பொழுது 'செல்வம்' அவன் கைக்குத் தப்பும்பொருட்டு

---

"அன்பே யுயிரா யழகே யாக்கையாய்
மன்பே ருலகு செய் மாதவ மதனால்
மலைமகள் கருணையுங் கலைமக ளுணர்வுங்
கமலையி னெழிலு மமைய வோ ருருவாய்."***

அதிக தீவிரமாய் ஓட எத்தனிக்கையில், அதுவரையும் அவன் அணிந்திருந்த அழகிய முகமூடியானது கீழே விழுந்துவிட்டது. அப்பொழுது அவளுடைய வாடி வதங்கி அவலக்ஷணமாய்க் கிடந்த உண்மையான முகம் வெளிக்குத் தெரிந்தது. அவளும் அவன் கைக்கு அகப்படாமல் ஓடி மறைந்துவிட்டாள். அதிர்ஷ்டனே மிக்க பிரலாபத்துடன் எங்கேயோ ஒரு தேசத்திற்கு ஓடிப்போய் மிகுந்த நிர்ப்பந்த ஸ்திதியில் சிறிதுகாலம் ஜீவித்துக்கொண்டிருந்துவிட்டு,பின்பு அங்கேயே உற்றார் உறவார் இல்லாத அந்நியனாய் மரித்துப்போனான். 'செல்வம்' என்ற நங்கையின் மீது அவன் கொண்ட மயக்கம் இவ்வாறாக முடிந்தது.

ஃ

இனி 'வறுமை' என்ற அவலக்ஷணம் பிடித்த மங்கையைத் தன் இன்பச் சுந்தரியாகக் கொண்ட 'துர் அதிர்ஷ்ட'னைக் கவனிப்போம். அவன் வறுமையைத் தன் பங்குக்கு வந்த காமவல்லியாய் அடைந்த நாள்முதல் அவள் அவன் பார்வைக்கு மகா அவலக்ஷணமும் மனதிற்கு மட்டற்ற வெறுப்பும் கசப்புமானவளா யிருந்தாள். ஆகிலும், அவள், துர் அதிர்ஷ்டன் போன இடங்களிலெல்லாம் இணைபிரியாத அன்றிலைப்போல அவனை விடாப்பிடியாய்த் தொடர்ந்தாள். அவன் எடுத்த காரியங்களிலெல்லாம் இடையூறுகளும் நஷ்டங்களும் ஸம்பவித்தன. விலையுயர்ந்த வர்த்தகச் சரக்குகளை ஏற்றிக்கொண்டு போன அவனுடைய கப்பல் கொள்ளைக்காரர்களிடம் அகப்பட்டுப் போயிற்று. மற்றொரு கப்பல் கற்பாறையில் மோதி உடைந்து கடலில் மூழ்கிப்போனதினால் பெரிய நஷ்டமுண்டானது. கடைசியில் துர் அதிர்ஷ்டன் தன் பணத்தை வட்டிக்குப் போட்டிருந்த காசுக்கடை முதலாளியானவன் தன் வியாபாரத்தில் பெரிய நஷ்டங்கள் நேரிட்டனவென்ற போக்கைச் சொல்லித் தன்னிடத்தில் வட்டிக்குப் பணம் போட்டிருந்தவர்களுக்கெல்லாம் கையை விரித்துவிட்டுத் தனது ஜநன ஊரை விட்டு ஓர் அந்நிய நாட்டிற்கு ஓடிவிட்டான். இதனால் துர் அதிஷ்டனுடைய ரொக்கப்பணத்தில் கொஞ்சங் குறைய முழுமையும் முழுகிப்போய் விட்டது.

ஃ

இவ்வித ஸம்பவங்களினால் தரித்திரதசைக் குட்பட்ட துர்அதிர்ஷ்டனானவன் மிகவும் மனநொந்து தீராத ஸஞ்சலத்திற்குள்ளானான். பின்பு அவன் மனச்சலிப்பினால் தனக்கு மீதியாயிருந்த அற்ப சொற்பமான ஆஸ்தியைத் திரட்டிக்கொண்டு தனது பிறந்த ஊரைவிட்டுப் புறப்பட்டு 'வறுமை' யைத் துணைவியாகக் கொண்டு காடுகளும் மலைகளுமுள்ள பிரதேசங்களில் கொஞ்சக்காலம் தேசாந்தரந் திரிந்து, கடைசியில் ஒரு பர்வதத்தின் அடிவாரத்திலிருந்த சிறு கிராமத்திற்குப் போய் சிறு குடிசையொன்றில் குடியிருந்தான். எந்தப் பாழுங் குடிசையானபோதிலுங்கூட 'வறுமை நங்கை' அவனோடு மனமொத்து அவனுக்கு வலிய வலிய முத்தங்கள் கொடுத்து அணைத்துவந்தாள். ஆனால், அவளுடைய முத்தங்கள் அவனுக்குத் தீராச் சலிப்பாகவே இருந்தன. எனினும், 'வறுமை நங்கை' மிக்க சாந்தமான முகமுள்ளவளாகி அவனுக்கு ஆறுதலையும் தேறு

"எவ் வினையோர்க்கு மிம்மையிற் றம்மை
யியக்குதற் கின்பம் பயக்குமோ ரிலக்கு
வேண்டும்; உயிர்க்கது தண்டுகோல் போலாம்."

தலையும் கூறி, ஞானம் நிறைந்த அநேக நல்ல புத்திமதிகளை அவனுக்கு லகுவாய்ப் புகட்டினன். இப்பூலோகப் பொருள்களின் மீது மிதமிஞ்சின பாசத்தை வைப்பது பேதைமையென்றும், லௌகிக ஸம்பத்தெல்லாம் நிலையற்றதாகையால் அதை நம்புவது பெரிய தப்பு என்றும் அவனுக்கு உணர்த்தினள். அண்டபிண்ட சராசரங்களனைத்தையும் சிருஷ்டித்து ஆண்டு ரக்ஷித்து வருகிற ஸர்வஞானமுள்ளவரும், தயாபரருமாகிய கடவுளுடைய பராமரிப்புக்கு அவன் தன்னை முற்றிலும் ஒப்புக்கொடுத்து, அவருடைய கிருபையின்மீது தன் முழு நம்பிக்கையையும் வைப்பதே தெளிந்த ஞானமென்று விளக்கிக் காட்டினள். இவ்வாறு 'வறுமை' என்பவள் அவனைச் செல்வவானுக்காவிடினும் பெரிய ஞானியாக்கி, அவனுக்கிருந்த மனநோவையும் ஸஞ்சலத்தையும் ஒருவாறு நீக்கி, அவனுடைய மனதை உள்ளதே போதுமென்ற திருப்தியிலும், பிரயாசைப்பட்டு மேலுக்கு உயரத்துணியும் முயற்சியிலும் திருப்பி, சாந்தமும் பணிவும் தாழ்மையுமுள்ளதாக்கி, பிறர் படும் இக்கட்டுகளை அவன் காண்கையில் மனதுருகி அவர்களுக்குத் தன்னால் கூடிய உதவிகளைச் செய்யத்தக்க தன்மை யுள்ளவனாகும்படி ஒரு பக்குவ மனிதனாக ஆக்கிவிட்டாள்.

(மறு ஸஞ்சிகையில் முடிவு.)

## காலஹரணத்தின் கபடம்.

ஒருவர் தன் மனைவியின் வற்புறுத்தலின்பேரில் தன் மனைவியின் ஸகோதரனுடைய பெண்ணைத் தன் குமாரனுக்குக் கொள்ளச் சம்மதித்துவிடுகிறார். ஆனால், அவருக்கு அதில் உள்ளுக்கு விருப்பமில்லாததால் இதோ அதோ என்று நாட்களைக்கடத்திக்காலஹரணம் செய்துகொண்டே போய், தன் குமாரனுக்குப் பெண்கொள்ளும் விஷயத்திற்குப் பெரிய இடையூறாக இருக்கக்கூடிய ஸம்பவம் ஏதேனும் நிகழ்ந்துவிடக்கூடாதாவென்று எதிர்பார்த்து நிற்பவராகிறார். இதற்கேற்றதுபோல் பிறகு தன் மனைவி மடிந்து, அவள் ஸகோதரனுக்கும் தனக்கும் ஒரு சிறு மனஸ்தாபம் மூண்டுகொள்கிறது. அந்த மனஸ்தாபத்தை மிகைப்படுத்திப் பேசி அதைத் தனக்கு அனுகூலமான வழியில் உபயோகித்துக்கொள்ள முயற்சி செய்கிறார். கடைசியில் இந்தச் சிறு மனஸ்தாபத்தையே பெரிதாகக் குறிப்பிட்டு, அதனால் தன் மனைவியின் ஸகோதரனுடைய பெண்ணைக் கொள்ள இஷ்டமில்லையென்று மறுத்துவிடுகிறார். இது காலஹரணம் அவருக்குச் செய்த உதவி. அவரது காலஹரண கபடமும் கைகூடிவிடுகிறது. இன்றைய நினைவு-உறுதி நாளை இல்லை.



# ஹாஸ்ய சஞ்சீவினி



அப்பாய்:—எதற்காக நீ சுருட்டு குடிப்பதை விட்டு விட்டாய்?

மாரிமுத்து:—என்னைப் பார்த்து என் மனைவியும் சுருட்டு குடிக்க ஆரம்பித்து விட்டாள். என்னிடம் அவள் சுருட்டு இரவல் கேட்காதிருப்பதற்காகவே நான் குடிப்பதை நிறுத்தி விட்டேன்.

ஃ

குப்பன்:—அந்தக் கிழவி காலையில் நான்கு மணிக்கெல்லாம் தவறாமல் எழுந்து கோலம்போட வந்து விடுகிறாளே?

சுப்பன்:—அவள் தாசியல்லவா! காலையில் 3-4-மணிக்கெல்லாம் தன் மாப்பிள்ளைகளை எழுப்பி வெளியில் அனுப்பிய பழய வழக்கம் அவளை ஒழுங்காக இப்பவும் அந்த நேரத்தில் எழுந்திருக்கச் செய்கிறதாக்கும்!

ஃ

முத்தண்ணா:—அந்த மனிதன் உன்னைக் காணும்போதெல்லாம் புன்னகை காண்பிக்கவும் முடியாமல், கோபிக்கவும் முடியாமல் ஒரு திகைப்பான பார்வை பார்த்துவிட்டுப் போகிறானே—ஏன்?

ஏமாறிய அண்ணா:—என்னை ச் செய்த படுமோச அலங்கோலம் என்னைக் காணும்போதெல்லாம் ஞாபகத்திற்கு வந்துவிடுகிறதோ என்னவோ!

ஃ

தந்தை:—ஏதம்மா உன் கணவனிடமிருந்து ஐந்து ரூபா மணியாடர் வந்தது? மாப்பிள்ளைக்கு ஏதாவது உத்தியோகம் கிடைத்ததா?

குமாரத்தி:—அப்பா! அந்த வயிற்றெரிச்சலை எவ்விதம் சொல்வேன், செலவுக்கு இல்லை யென்று என் கழுத்திலிருந்த நகையில் ஒன்றை விற்று விட்டு அந்தப் பணத்தில் இந்த ஐந்து அனுப்பியிருக்கிறார்.

ஃ

சேஷி:—அவர்கள் இரண்டுபேரும் சாந்தி கல்யாணத்துக்கு முன்பே ஒன்றாகி விட்டார்கள். அதை நான் தான் முதலில் கண்டு பிடித்தவள்.

காமு:—இந்த சங்கதியை இதுவரை எத்தனை பேரிடத்தில் சொல்லியிருப்பாய்? அதில் நான் எத்தனையாவது மனுஷி? இதுதானா உன் வேலை?

ஃ

அந்து:—அவன் செலவுக்கு ரொம்பவும் கஷ்டப்படுகிறானே?

சந்து:—கடவுள் தரும் கஷ்டத்திற்கு விடுதலையில்லை. தானாக எந்த வேலைவெட்டியுமின்றி உட்கார்ந்தபடியிருந்தால் கஷ்டம் வராதா?

ஃ

—"சட்டென்று அந்தந்தத் தொழிலாளிக்கும் ஒவ்வொரு யோசனை உடனே புறப்படுகிறதே? அது எப்படி?"

---

நம் தேசம் தராதலத்தில் நடுநாயகம் என்று யார்தான் எண்ணுதார்? பிறந்த மண்ணின் விருப்பும், தன்னைத் தோற்றுவைத்த துளிக்குச் சொந்தமானவர்கள் மீதுள்ள வாஞ்சையும் இலகுவில் விட்டுப்போமோ?

—"அது அவனவன் தன் தொழில் முறையில் பெற்றுக் கொண்ட நீண்ட பழக்கத்தினுடைய சூட்சும அறிவு ஆகும்."

ஃ

பொம்மன்:—திம்மா! ரெங்கனுக்கு என்ன உத்தியோகம்!

திம்மன்:—கிரந்த காலக்ஷேபம்.

பொம்மன்:—அப்படி யென்றால் என்ன?

திம்மன்:—தன் தந்தை சேகரித்து வைத்த அரும் பெரும் பழய நூல்களைப் பாதி கால் விலைக்கு விற்றுத் தொலைத்து அதனால் காலங் கடத்துகிற காலக்ஷேபம். இப்படியே சிலருக்குத் தன் மனைவியின் நகைகளை விற்று உண்ணுகிற காலக்ஷேபம்!

ஃ

கேசவன்:—நீ முன்பு பத்மியிடம் வெகு அன்பாக இருந்தாயே?

வாசவன்:—ஆமாம், அவள் எனக்கு இணங்கி வருவாளென்று நம்பினேன். அவளோ 'அது' ஒன்றுபோக மற்றதற்கெல்லாம் வெகு நல்ல பெண்போல் காண்பித்தாள். சீ யென்று வெறுத்துத் துரத்திவிட்டேன். என்னை ஏமாற்றுகிறவளுக்கு என் காசு ஏன் செலவாக வேணுமோ?

ஃ

கனகம்:—உனக்கு எத்தனை பிள்ளைகளம்மா?

செல்வம்:—ஒன்றுமில்லை. பத்து பிள்ளைகளைப் பெறவேண்டுமானாலும் என் வயிற்றில் இடமிருக்கு. ஆனால் தாலி பாக்கியம் இல்லையே?

ஃ

ருக்மணி:—என்னடியம்மா, உங்கள் வீட்டுக்கு வந்ததற்குக் காபி கூட வைக்கவில்லையே. குடித்தனம் வெகு செட்டு போலிருக்கே?

ரெங்கநாயகி:—மானம் போகாமலும், ஒருவர் வீட்டு வாயிலுக்குச் சென்று ஒரு கவளம் சோற்றுக்குக் காத்திராமலும், கழுத்தில் இரண்டு நகையோடு நாலுகாசு மிச்சம் பிடித்து வாழ்ந்தால், அதிலுள்ள கௌரவம் இந்தப் பலகாரம் காபியில் வந்து முளைத்து விடாது. ஊரெங்கும் கடனாய் வெறுந்தாலிக் கழுத்தாய் உன்னைப் போலிருந்துகொண்டு எங்கள் வீட்டிலும் காபி வைக்கிறார்கள் என்று கௌரவம் பேசிக்கொள்வதில் எவ்வித பெருமையுமில்லை. காபிக்குமுன் நீராகாரம் குறைந்து போனதல்ல. அதனால் செலவும் மட்டு, பசியும் தாங்கும், வயிறும் நிறையும், குடித்தனத்தையும் செட்டாக நடத்த முடியும், நாலு பேருக்கு முன் தலை நிமிர்ந்தும் நிற்கலாம்.

ஃ

வினா:—உனக்கு வேண்டாதவர்கள் வீட்டிற்கு வந்தால் அவர்களை வெளியேற்றுவதெப்படி?

விடை:—அவர்களிடம் அதிகமாய் முகம் கொடுத்து நிற்காதே. உர் என்று இரு. வீட்டில் உன் மனைவியோடு ஒரு சண்டையை ஆரம்பித்துக்கொள். சிடு சிடு கடு கடு என்று தடபுடல் செய்து படபடப்பாய் இரண்டொரு அடிதடிகளையும் மனைவி

---

கலகமானது—மேற்கொண்டும் ஒரு குறித்த அக்கிரமம் தொடர்ந்து நடவாதபடிக்கும், பிளவுபட்ட இருவருள்ளும் ஒரு சமரஸ முடிவேற்படுத்தவும் அது ஒருவழியை யுண்டுபண்ணி விடுவதாயுள்ளது.

மக்களிடம் சுடச்சுடக் காட்டிவிடு. வந்தவர்கள் இருப்பதற்குப் பிடிக்காமல் போய்விடுவார்கள்.

ஃ

கேள்வி:—எதற்கு எது கூடாது?

பதில்:-சக்கரையுடன் உப்பு சேர்க்கூடாது. பெண்பிள்ளைகளுடன் ஆண் பிள்ளைகள் சேர்ந்து விளையாடக்கூடாது. வாய் சரஸங்களுடன் கை சரஸங்கள் நெருங்கிவிடக்கூடாது. கண்டிப்புடன் வேலை வாங்கும்போது காமக்கண் கூடாது. இவ்விதமே நெடுக யோசித்துக்கொள்.

ஃ

மாணுக்கன்:—"புணர்ச்சி" என்றால் அருத்தமென்ன?

சட்டாம் பிள்ளை:—ஒரு வார்த்தையின் கடைசி எழுத்தும், அதற்கு அடுத்துவரும் வார்த்தையின் முதல் எழுத்தும் ஒன்றுபடச் சேருவதற்கே "புணர்ச்சி" எனப்படும். உதாரணம்:—மணி + அழகு = மணியழகு.

மாணுக்கன்:—வேறு அர்த்தம் உண்டா?

சட்டாம் பிள்ளை:—பள்ளிக்கூடத்தில் இலக்கண நூலில் படிக்கவேண்டிய அருத்தம் இப்படித்தான்.

## கடிதத்தின் ஆர்வம்.

எப்போது கடிதம் வருமோவென்று எதிர்பார்ப்பு. வந்த கடிதத்தை அதின்மேலுள்ள எழுத்துகளைக்கொண்டே இன்னார் கடிதம் என்று தெரிந்துவிடுவதே அதிகம். புதிய கடிதமாகில், மேல் உறையால் அறிந்துகொள்ள முடியாவிடில் எந்த ஊர் என்று தபால் முத்திரையைக் கவனிப்பதும், பிறகு உறையைக் கிழித்துக் கடிதத்தைப் பிரித்து எவர் எழுதியதென அடியில் கையெழுத்தைப் பார்ப்பதும் இவையெல்லாம் வெகு சுறுசுறுப்புடனும் நடக்கும். இதற்குப் பிறகே கடிதத்தை வாசிக்க ஆரம்பிக்கிறோம். ஒரு கடிதத்தைப் படிப்பதில் நமது மனத்தின் ஆவலாதிகட்கேற்ப எத்தனையோ வித்தியாஸங்களைக் காட்டுகிறோம். தபாற்காரனைக் கண்டதும் கடிதம் வந்ததா என்று கேட்டு, அவன் ஒன்றுமில்லை என்னும்போது நமது உள்ளம் ஏமாறிப்போய் முகம் எவ்வளவோ வாடிவிடுகின்றது!

சங்கீதத்தைக்கேட்டு அழும் குழந்தை வாய்மூடுகின்றது; ஆனால் பாடுகிறவர் தொண்டை மதுரமாயிருந்தால்தான். சித்திரமெழுதுபவர் மனதைக் கவருகிற சித்திரம் எழுதுகின்றார்; ஆனால் அவருடைய கை நடுக்கமில்லாமலிருந்தால்தான். நகைவியாபாரி ரத்தினங்களைச் சரியான விலை மதிக்கிறான்; ஆனால் அவனுடைய கண்பார்வை கெடாதிருந்தால்தான். சூக்ஷ்மமான யுக்தி புத்தியினால் ஒருமனிதன் லக்ஷக்கணக்காய் பணம் சம்பாதிக்கிறான்; ஆனால் அவனுடைய மூளை சரியாய் இருந்தால்தான்.




1. ஒரு காலத்தில் கைவண்டி இழுத்த மனிதனும், கூலிவேலை செய்த மனிதனும், சிறு வெற்றிலைப் பாக்குக்கடை வைத்துச் சீவித்த மனிதனும் இன்று ஒரு சீமானாய் சகல சுகபோகங்களோடும் இன்புற்று வாழ்வதைப் பார்க்கின்றோம்.

2. உன்னிடம் ஏதாவதொரு உதவியை நாடி வருபவர்களிடம் எங்கு வந்தீர்கள், என்ன காரியமாக வேண்டும், ஏதாவது விசேஷமுண்டா என்பனபோன்ற கேள்விகளுக்குமுன், "வாருங்கள்" என்னும் அழகிய மொழியை முதலில் கூறிவிடு. அது உனக்கு ஒரு தனி மதிப்பைத் தரும்.

3. ஒரு குமாஸ்தாவை நமக்கு உதவியாகச் சேர்த்துவைத்துக் கொள்ளுகிறோம். பின்னர் அவரின் நடத்தை நமக்குப் பிடிக்காவிடினும் அன்னவரை நீக்க முடிவதில்லை. ஏனெனில் நமது இரகசிய மனைத்தையும் அறிந்துகொண்ட அவர் எதிரியுடன் சேர்ந்துகொண்டு விடினோ?

4. ஒருவரிடம் ரூபாய் நூறு கைமாற்றாகக் கேட்கிறோம். அவரும் தரச் சம்மதிக்கின்றார். நாம் நாளைத் தான் தேவையாகையால் காலையில் வாங்கிக்கொள்வதாகச் சொல்லித் திரும்புகிறோம். இடையில் இது விஷயங்களை அறிந்த அவருடைய நண்பரின் சூழ்ச்சியால் மனம்மாறி மறுநாள் தர மறுத்துவிடுகிறார். உடனே வாங்கிக்கொண்டிருப்பின் மற்றொருவரின் வார்த்தையைக் கேட்கச் சந்தர்ப்பமில்லை யல்லவா. சிலாது புத்தி அவ்வளவு சீக்கிரத்தில் மாறிப்போய் விடுகிறதென்பது ஒரு பெரிய அனுபவம்.

5. இக்காலத்தில் சாப்பாட்டிற்கே திண்டாடுகிறவனுக்கும், சட்டை வேஷ்டி அங்கவஸ்திரம் முதலிய அனைத்தும் குறைவின்றி வேண்டியிருக்கிறது. ஆடம்பர உடைகளின் உதவி இன்றேல் எந்த இடத்திற்கும் செல்லமுடியாது; மதிப்பும் கிடையாது.

6. ஒருவர் ஒரு வியாபாரத்தைத் துவக்கும்போது மற்றொருவரிடம் யோசனை கேட்க, அவர் அவ்வியாபாரம் இக்காலத்திற்கு ஏற்றதில்லையெனக்கூற, முன்னவர் சபடமறியாது நம்பி அடுத்த ஊர்சென்று வேறு தொழிலிற் புகுந்து ஜீவிக்கின்றார். பின்னவரோ அதே ஊரில் நண்பர் யோசனை செய்த வியாபாரத்தையே துவக்கி இலாபமடைகின்றார். இதைப் பின்பு தெரிந்துகொண்ட முன்னவரோ இவரிடம் தமது யோசனையைத் தெரிவித்ததாலல்லவா இவ்வாறாயிற்றென்று தம்மை நொந்துகொள்கிறார்.

7. தமக்கு வரும் பத்திரிகைகளின் மேலுறையைக்கூடப் பிரிக்கா

---

"கள்ள மனந்தான் றுள்ளு" மென்பதுங்
"தன்னுளங் தன்னையே தின்னு" மென்பதுங்
"குற்ற முள்ளோர் கோழைய" ரென்பதுஞ்
சற்றும் பொய்யல்ல—

தவர்களுமுண்டு. பத்திரிகைக்காகப் பிரதிதினமும் தபால்காரரின் வரவு நோக்கித் தெருவில் காத்திருப்போரையும் நாம் காண்கிறோம்.

8. நீ மற்றவர்களின் துன்பங் கண்டு மனமிரங்கி உன்னாலான சிறு உதவியையேனும் செய்வாயாகில் உனக்குத் துன்பம் வருங்காலத்து கடவுள் அருகே நின்று உன்னைக் காப்பாரென்பது உறுதி.

9. உன்னிடம் அறிந்த விஷயங்களைப் பிறரிடம் சொல்லியும், பிறர் காரியங்களை உன்னிடம் தெரிவித்தும் இங்குமங்கும் திரியும் மனிதனால் தீமையே அல்லாது நன்மை சிறிதுமில்லை யென்பதை உணர்ந்துகொள்.

10. நாம் முன்பின் அறியாத மனிதரிடம் முதலில் பேசுவதற்கு அதிசகூச்சம்-யோசனை-சங்கோசம். சிறிது பேசிவிடினே பின்னர் பல நாள் பழகியவர்கள் போல் ஆகி வார்த்தைகள் ஒன்றின்பின் ஒன்றாகத் தோன்றிக்கொள்ளும்.

11. வியாபாரம் செய்வதற்கு முகமறியாத வேற்றூர்தான் மிகவும் நல்லது. அங்கு யாருக்கும் நம்மைத் தெரியாதாகையால் நமது சரக்கு ரொக்கத்திற்கே விற்பனையாகும், ஒருவரும் கடனுக்குக் கேளார்.

12. ஒரு பெரிய மனிதரின் வீட்டிற்கு ஒரு காரியார்த்தமாகச் செல்லுகிறோம். அங்கு வீட்டின் கதவு அடைக்கப்பட்டிருக்கிறது. புதியவர்களான அவ்வீட்டினரை எப்படியழைப்பது என்றயோசனை மேலிட, அத்தருணம் அவ்வில்லத்தின் சிறுவன் கலாசாலையிலிருந்தும் வர, அவனுதவியால் உட்செல்லக்கூடியதாகி நமது காரியமும் முடிவடைகின்றது.

13. கையெழுத்துக்கூடப் போடத் தெரியாத பெருஞ் செல்வனிடம் அவனின் ஒரு சிறு வார்த்தைக்குக் கணக்கிலா மனிதர் கைகட்டி வாய் பொத்திப்பணிந்து நிற்பதை உலகில் காணலாம். அது ஒரு அதிர்ஷ்டம்!

14. ஒரு உத்தியோகத்தி லிறங்கும்போது மிகவும் பிரமாதமாகவும், தன்னால் நிர்வகிக்க முடியுமோ எனவும் தோன்றும். துணிந்து புகுந்து சில நாட்கள் சென்றால் மிகவும் இலேசாகவும் இன்னொரு உத்தியோகத்தையும் சேர்த்து நிர்வகிக்கத் தனக்கு சக்தி இருப்பதாகவும் அறியலாம.

C. V. N. நாராயணன் செட்டியார்.

## எதுவும் தன் அறிவின்வழியில் கலந்து அமையும்.

ஒருவன் எத்தனை படிக்கினும், அவனிடம் தன்னறிவு, தனது நடை என ஒன்று தனியே உண்டு. அவ்வறிவின் வழியே, அவனது நடையின்வழியே, அதற்குள அமைந்த சாயத்தில் அத்தனை படிப்பும் தோய்ந்து அவன்றன் சாயமேயாகி, அவனுடைய மனத்தில் அடங்கித் திரண்டு திடம் பெற்று, அவனது உருவமாகி, பின், அவ்வொருவனின் சுயவழியாய் வரிவடிவினும், ஓசைவழியினும் எழுந்து, பிறர் அவற்றைக் கேட்கவும், படிக்கவும் ஆகி உலகிற்பரவி நிலவும்.




# இராஜசந்திரன்

## அல்லது—மறைந்த கைதி.



### அத்தியாயம்—11.

### கண்ணப்பனின் ஓயா முயற்சி.

(168-ம் பக்கத் தொடர்ச்சி.)

### XI.


பொன்னுசாமியின் தந்தை தாதுவிர்த்திக்காக ஒரு கடினமான பஸ்பத்தைப் புசித்து வாய் வயிறு யாவும் வெந்து ஒருமாதத்தில் காலஞ்சென்ருர். புதிய இளைய மனைவியைத் 'திருப்தி' செய்ய மருந்துண்டு தேகதிடத்தைத் தேடிக்கொள்ள முயன்றதில் மரணத்தின் வாய்ப்பட்டு முடிந்தார். கருணையே உருக்கொண்ட கமலவல்லி இத்தருணத்தில் பொன்னுசாமிக்கு ஏதேனும் சொத்துக்கள் கிடைக்கும்படி செய்து அவனைக் காப்பாற்றிவிட நினைத்துக் கண்ணப்பனிடம் தன்கருத்தைக்கூறினுன். தயாளுவாகிய கண்ணப்பனும் பொன்னுசாமிக்குத் தந்தி யனுப்பித் தருவித்துத் தன் வீட்டிலேயே இருக்கச்செய்து, தானே வக்கீலாக இருந்து வழக்கை நடத்தினுன். பொன்னுசாமியின் பக்கம் பதினுயிரம் ரூபாய்க்குத் தீர்ப்பாயிற்று. கண்ணப்பனின் உதவிக்குப் பொன்னுசாமி மகிழ்ந்தானுயினும், அவனது தீய ஸ்வபாவம் அவனைவிட்டுப் போகவில்லை. கண்ணப்பனைக் காணக் கிருஷ்ணவேணி வரும்பொழுதெல்லாம் பொன்னுசாமி மறைந்திருந்து கேட்டு ஒன்றுக்குப் பத்தாகக் கமலவல்லியிடம் கூறுவான். குற்றமற்ற கமலா இவன் வார்த்தைகளை மெய்யென்றே நம்பிக் கண்ணீர் விடுவாள். பொன்னுசாமி அவளுக்குச் சமாதானம் செய்பவன்போல் தானும் கண்ணீர்விட்டழுது, 'ஐயோ! உன் தலைவிதி இப்படியாயிற்றே' என்றுகூறி அவளைத் தேற்றுவான். கமலா இவ்விதம் துக்கிப்பினும், பொன்னுசாமியின் வார்த்தைகளைச் சோதித்தறிந்து உண்மை தெரியவேண்டுமென்று சமயம் பார்த்திருந்தாள். குடும்பத்தைக் கலக்கிப் பிரித்துவிட மற்றவர் முயன்றபோதிலும், புத்திசாலிகள் எதையும் நிதானத்துடனேயே யோசிப்பார்களன்றி அவசரப்பட்டுவிட மாட்டார்கள்.

ஃ

கிருஷ்ணவேணிக்குத் தபாலில் ஒரு கடிதம் கிடைத்தது. விலாஸத்தின் எழுத்துகள் வேறொருவரால் எழுதப்பட்டிருந்தது. கடிதத்தைப் பிரித்துப்பார்க்கவும் தன் தமையனின் கடிதமாயிருக்கக்கண்டு ஆநந்தித்தாள். அதில் நாளை மாலை தோட்டத்திற்கு தான் வருவதாக இராஜசந்திரன் குறிப்பிட்டிருந்தான். அக்கடிதத்தை ஸந்தோஷத்துடன் எடுத்துக்கொண்டு கிருஷ்ணவேணி கண்ணப்பனிடம் வந்து தோட்டத்திற்குட் சென்று இருவரும் அந்தரங்கமாக ஸம்பாஷித்தனர். பொன்னுசாமி அச்சமயம் அங்கு ஒரு பக்கம் மறைந்து நின்று இவர்கள் பேசுவதைக் கவனித்தான். கமலாவும் பொன்னுசாமியின் வார்த்தைகளில் எவ்வளவு உண்மையிருக்கிறதென்று அறிவதற்காகக் கண்ணப்பனும் கிருஷ்ணவேணியும் பேசிக்கொண்டிருக்கும் இடத்திலிருந்த புஸ்தகசாலைக்குள் சென்று பலகணி வாயிலாக இம்மூவரையும் நோக்கியபடி யிருந்தாள். கண்ணப்பன் கிருஷ்ணவேணி கொண்டுவந்த கடிதத்தைப் பார்த்துவிட்டுத் தான் வெகு பக்குவமாகக் குற்றவாளியைச் சிக்கவைக்கப் போவதாய்க் கூறினன்.

கிருஷ்ணவேணி:—நீ என்ன ஏற்பாடுகள் செய்யப்போகிறாய்?

கண்ணப்பன்:—நாளை மாலை உன் வீட்டுக்கு இராஜசந்திரன் வந்ததும் சரியாக ஏழுமணிக்கு இங்கு அழைத்துவந்துவிடு. என் ஆபீஸ் அறையின் ஜன்னல் பக்கத்தில் இராஜசந்திரனை நிற்கவைத்து மெதுவாக உள்ளே யிருப்பவர்களைக் கவனிக்கச்சொல். அச்சமயம் நான் தங்கவேலுவைத் தருவித்து அவன் வழக்கைப்பற்றிப் பேசுவதுபோல் இருக்கிறேன். கொலை செய்த தங்கவேலு அவன்தானு என்று உன் தமையனை நன்றாகப் பார்த்துக்கொள்ளச் சொல். பிறகு நமது காரியம் சுலபமாகும் என்றான். கிருஷ்ணவேணி இந்த யோசனைக்காகக் கண்ணப்பனைக் கொண்டாடி அவன் பாதங்களில் விழுந்து நமஸ்கரித்தாள். பிறகு கிருஷ்ணவேணி புறப்பட்டுச் சென்றாள்.

ஃ

இந்தச் செய்தியைப் பொன்னுசாமி வேறுவிதமாக மாற்றிக் கமலாவிடம் வந்து, கண்ணப்பன் ரகசியமாகக் கிருஷ்ணவேணியை மணக்க ஏற்பாடு செய்துவிட்டானென்றும், அந்த ஸந்தோஷத்தால் கிருஷ்ணவேணி பூரித்துப்போய்க் கண்ணப்பனின் காலில் விழுந்து நீரே என் பிராணபதி என்றுகூறி நமஸ்கரித்ததாயும், இனி கண்ணப்பனின் மீது கமலா ஆசை வைப்பதில் பயனில்லை யென்றும் புகன்றான். கமலா யாவற்றையும் மறைந்திருந்து கவனித்தவளாதலின் பொன்னுசாமியின் வஞ்சகச் சொற்களின் விஷத்தைக் கேட்டுத் திடுக்கிட்டவளாய், இப்படித்தான் இருக்கும் இதற்குமுன்பு இவன் கூறியவைகளும் என்று யோசித்தபடியே—"இனி என் பர்த்தாவைக்குறித்து எந்த சங்கதியும் எனக்குத் தெரிவிக்க வேண்டாம்; நான் உன் வார்த்தைகளில் மயங்க முடியாது; உன்னைப் போலவே நானும் இன்று மறைந்து கேட்டு யாவும் தெரிந்துகொண்டிருக்கிறேனென்பதை நம்பு" என்று கடுகடுத்துப் பேசிவிட்டு, 'எத்தனை சூதுளான், எத்தனை கொடியன்' என்று தனக்குத்தானே சொல்லிக்கொண்டு

சில சமயங்களில் நாம் செய்யுங்காரியம் ஆத்திரத்தைத் தீர்த்துக்கொள்ள அந்த முறை ஒரு வழியாகிறதே யல்லாது, விசேஷநன்மை யெதையும் அது உண்டுபண்ணுமென நினைப்பதற்கில்லாமலே போய்விடுகிறது.

உள்ளுக்குச் சென்றுவிட்டான். பொன்னுசாமி திகைத்து நின்றான்.

ஃ

அன்றையதினமே கண்ணப்பன் மறுநாள் இரவு எழுமணிக்குத் தன்னை வந்து கேஸ் விஷயமாகக் காணும்படி தங்கவேலுக்குக் கடிதம் எழுதியனுப்பினான். மறுதினமும் வந்தது. இரவு எழுமணியாயிற்று. கிருஷ்ணவேணி தன் தோட்டத்தில் தன் தமயனைச் சந்தித்துப் பேசிவிட்டு, அவனைச் சாரதா விலாஸத்திற்கு அழைத்து வந்து கண்ணப்பனின் ஆபீஸ் அறைக்குப் பக்கத்தில் நிறுத்தி வைத்திருந்தாள். இராஜ சந்திரன் எவ்விதமும் அந்த நேரத்தில் அங்கு வந்திருக்கக்கூடுமென்பதை யறிந்த கமலவல்லி மெதுவாக அங்கு சென்று தான் நினைத்தவாறு இராஜசந்திரன் இருக்கக் கண்டு அவன் கரங்களைப் பற்றித் தன் கண்ணீரால் நனைத்து,

"கருந்திடை நினைதோறுங்
கண்ணிடு மணல்போல்
உறுத்துவ திறைவ!

ஈசனே! என் அன்புத் தமையனையும் இந்தக் கோலத்தில் காணவா விதித்தனை! என் தந்தை யிருந்து இந்த அலங்கோலத்தைப் பார்க்காமற் போனது அவர் செய்த புண்ணியம் போலும்" என்றுகூறித் துக்கித்தாள். பக்கத்திலிருந்த கிருஷ்ணவேணி கமலாவின் அன்பைக்கண்டு கண்ணீருடன் அவளைத்தழுவிக்கொண்டாள். கமலாவும் கிருஷ்ணவேணியைப் பழய அன்புடன் அணைத்துக்கொண்டாள். இத்தருணத்தில் கண்ணப்பனின் அறைக்குள் ஒருவன் நுழைவதை இம்மூவரும் பலகணி வழியாகப் பார்த்தனர். கண்ணப்பன் தன் அறைக்குள் வந்த தங்கவேலுவை உபசரித்து அவன் வழக்கு விஷயமாகச் சிறிதுநேரம் பேசிவிட்டு, நீ ஐந்து வருஷங்களுக்கு முன்பு பௌரிங்கிப் பேட்டையில் வசித்து வந்தாயா என்றான்.

தங்கவேலு :—ஆம், வசித்து வந்தேன். அங்கு வியாபாரத்தில் நஷ்டமுண்டானதால் இப்பொழுது கிராமத்திலிருக்கிறேன்.

கண்ணப்பன் :—உனக்குக் குமாரசாமி முதலியாரின் பெண் அபிராமியைத் தெரியுமா?

தங்கவேலு:— அபிராமியைப்பற்றிக் கேள்விப்பட்டதேயன்றி நேரில் பார்த்ததில்லை. அவள் தந்தை குமாரசாமி முதலியாரின் கொலையைப்பற்றி லக்ஷ்மணனும் எதிராஜனும் எனக்குக் கூறினர். கொலை நடந்தசமயம் என் கிராமத்தில் எனக்கு வைசூரி வார்த்துப் படுத்துக்கிடந்தேன்.

கண்ணப்பன் :—நீ அபிராமியைக் காதலித்ததுண்டா?

தங்கவேலு :—நான் ஸ்திரீலோலனல்ல. அபிராமியின் ரூபமே இவ்வாறிருக்குமென்று எனக்குத் தெரியாது. என் நல்லொழுக்கத்தைப் பற்றி நன்றாக விசாரித்துப்பாருங்கள்.

என்று கூறிச் சென்றான். அவன் போனதும் கிருஷ்ணவேணி கண்ணப்பனின் அறைக்குள் வந்தாள். வெளியே இராஜசந்திரனும் கமலாவும் ஏதோ பேசியபடி யிருந்தனர். கிருஷ்ணவேணி கண்ணப்பனிடம் இப்போது வந்து சென்றவன் குமாரசாமி முதலியாரைக் கொன்ற தங்க

---

"காதல் கொனநீ விழைந்த மாது பெருஞ் சூதாய்க்
கை விடுத்துக் கழன்றனளோ?"

வேலு அல்லவென்று தன் தமயன் கூறுவதாகத் தெரிவித்தாள். கண்ணப்பன் தன் ஏற்பாடு முழுதும் வீணானதை யறிந்து வருந்தியவனாய் வெளியில்வந்து இராஜசந்திரனுடன் பேசினான்.

இராஜசந்திரன் :—கொலை செய்த தங்கவேலு இவனல்ல. அவன் அதிக சிவப்பாகவும், சற்று குள்ளனாகவும், எவரும் மயங்கத்தகுந்த அழகுள்ளவனாகவும்*****

கமலவல்லி :—அடிக்கடி தன் உச்சிக்குடிமியைத்தட்டி முடிபோடப் பார்த்து முடியாமல் ஏமாறுபவனாகவும்*****

இராஜசந்திரன் :—ஆமாம், அவன் உச்சிக் குடிமியைத் தட்டி அடிக்கடி முடிபோடப் பார்ப்பான். கமலவல்லி உனக்கு அது எப்படித் தெரிந்தது ?

கமலா :—நான் வேடிக்கையாக வல்லவோ சொன்னேன். அது உண்மையாய் முடிந்து விட்டதா ? ஆச்சரியந்தான்.

கண்ணப்பன் :—நான் எவ்வளவோ பிரயாசைப் பட்டும் உண்மையான தங்கவேலு கிடைக்காமற் போய்விட்டான். தெய்வமே அறியுமென் சித்த நிலைமையை !

கமலா :—அதைப் பிறகு யோசிக்கலாம். அண்ணா! இன்றிரவுக்கு நீ இங்கு என்னுடன் புசிக்க வரவேண்டும். நான் இப்போது என் சிநேகிதியின் வீட்டு விசேஷத்திற்குச் சென்று அரைமணி நேரத்தில் வந்து விடுகிறேன். அதற்குள் நீ தாயாரிடம்போய் வந்துவிடு.

என்று கமலா சொல்லவும் இராஜசந்திரனும் அதற்கு ஒப்புக்கொண்டான். பிறகு கிருஷ்ணவேணியும் இராஜசந்திரனும் விடை பெற்றுச் சென்றனர். இவர்கள் போனதும் கமலா தன் சிநேகிதியின் வீட்டிற்குச் சென்றாள். கால்மணி நேரத்திற்குப் பிறகு இராஜ சந்திரன் சாரதா விலாஸத்திற்குத் திரும்பி வந்து கண்ணப்பனைக்கண்டு "கொலை செய்த தங்கவேலு ஒரு வண்டியிற் போவதைப் பார்த்தேன். உள்ளுக்கு எவரோ உட்கார்ந்திருந்தார்கள். வண்டியின் முன் பக்கத்தில் அந்தக் கொலைபாதகனான தங்கவேலு இருக்கக்கண்டு திடுக்கிட்டேன்" என்றான்.

கண்ணப்பன்:—வண்டியின் இலக்கத்தைக் கவனித்தாயா ?

இராஜ சந்திரன் :—ஆஹா ! வண்டியின் நெம்பர் ஐம்பத்தாறு.

கண்ணப்பன் :—ஐம்பத்தாறு? ஆச்சரியம்தான்.

இதற்குள் கமலவல்லியும் திரும்பி வந்தாள். இராஜ சந்திரன் இரவு கண்ணப்பனோடும் புசித்தான். கமலாவும் இராஜ சந்திரனும் விடிய விடியப் பேசிக்கொண்டிருந்தனர். கண்ணப்பன் சற்று நேரத்திற்குள் நித்திரை போய்விட்டான். இரவு நேரத்தில் பொன்னுசாமி வீட்டிற்கு வரும் வழக்கமில்லை. அதிலும் தந்தையின் பணம் கிடைத்த பிறகோ டம்பாசாரியின் விஷயங்களைப்பற்றி விவரிக்க வேண்டியதில்லை. விடியற்காலையில் நான்கு மணிக்கு இராஜ சந்திரன் எழுந்து கமலவல்லியிடமும் கண்ணப்பனிடமும் விடை பெற்றுச் சென்றான். அவன் போன பிறகு கொலைசெய்த தங்கவேலுவைச் சிக்க வைப்பதற்கு எந்த உபாயத்தை அனுஷ்டிக்கலாமென்று கண்ணப்பனும கமலவல்லியும் யோசித்து ஒரு விதமான முடிவுக்கு வந்தனர்.

(தொடரும்.) S. G. R.

# வறுமைப்பிணி.



வறுமை வாய்ப்பட்டோன் எத்துணை சாமர்த்தியம் அடையப்பெற்றிருந்தாலும், எவ்வித வாக்கு சாதுரிய நிபுணனாயிருந்தாலும், பல்துறையிலும் உழன்று கரையேறும் வன்மை பொருந்தியவனாயிருந்தாலும், அவன் தனது ஆற்றலைச் செவ்வையாக உலகிற்குக் காட்டி உலகம் அவனை மதிக்கும்படி செய்துகொள்வதற்குச் சக்தியில்லாதவனாகின்றான்.

ஃ

உதாரணமாக, மிகுந்த சாமர்த்தியம்வாய்ந்த ஒரு கவி இருக்கிறார் என்று கொள்வோம். அவர் தம்முடைய கவித்திறமையால் பல நூல்களுக்கு ஆசிரியராக அமைகிறார். அவர் எழுதிய நூல்கள் யாவும் உலகில் நன்றாய்ப் பரவினால்தான் அதைப் படித்தோர் அவ்வாசிரியரை விரும்பி அவரின் மற்ற நூல்களை ஆர்வம் மிகுந்து வாசித்து ஆசிரியரின் வறுமைப்பிணியை சீக்கிரத்தில் விரட்டல் கூடும். அவ்வாறில்லாது தன் நூல்களை அச்சாக்கி வெளியிடவே போதிய பணமும், செல்வர் உதவியும் இல்லாது போனால் உலகம் அவரை எவ்வாறு அறிந்துமதிக்கும்? உலகத்தினால் அவர் என்ன அனுகூலம் அடையப் போகிறார்? இவ்வனம் விருத்தியின்மைக்குக் காரணம் வறுமைப் பிணியன்றோ?

ஃ

வறுமை ஒருவனை வந்தணுகாவிட்டால் அவன் பல அதியற்புத வேலைகள் செய்திருக்கக்கூடும். தன்னில் எழும் ஆராய்ச்சிகளைப் பரிசோதிக்கத் தன்னிடம் பணமில்லாவிட்டால் தன்னில் எழுந்த ஆராய்ச்சி எதற்கு உதவுகிறது? வறுமையின்றி அவன் இருந்திருக்கப் பெற்றால் அவன் ஆராய்ச்சியும் பூரணமாகி அத்துறையில் சிறந்த பெயரும் புகழும் அடைவதில் ஐயமில்லை. வறுமையினால் எத்தனை அன்பான தாய் தந்தையர்கள் தங்கள் மக்களை உயரிய கல்வியிற் பயிற்றுவிக்க வழியில்லாதிருக்கிறார்கள்? அம்மக்கள் மிகுந்த புத்திமான்களாகவே இருக்கக்கூடும் தான். என் செய்ய? அவர்களின் காலம் வீண்காலமாகிக் கூர்மையில்லாக் கத்தியாக முடிகின்றது.

ஃ

"ஏழை சொல் அம்பலமேறாது" என்னும் பழமொழிக்கேற்ப, ஏழையாகிய ஒருவன் சத்தியவந்தனாயிருந்தாலும் அவன் சத்தியவந்தனென்று எவரும் ஒப்புவாரில்லை. ஒரு பணக்காரன் மிகுந்த பொய்யனென்று பலராலும் கூடிப் பேசப்பட்டு இகழப்பட்டாலும் அவனெதிரில் அவனைப் பொய்யனென்று யாரும் அழையார். ஒரு கொலைவழக்கில் உண்மையாக

---

நாளை சேர்மன் பதவி, கௌன்ஸிலர் பதவி தனக்கேதான் ஏற்படுமென்று எண்ணமிடுபவர் இரவில் கனவிலே அவ்விதமே ஆகிவிட்டதாகக் காணுகிறார். மறுதினத்து அதிர்ஷ்டம் எப்படியிருக்கிறதோ? நாற்காலி ஆள்—(Chair man) பதவி கௌன்ஸிலர் பதவி வருகிறதோ இல்லையோ?

நடந்தவற்றைப் பார்த்த ஏழை யொருவனும், எவற்றையும் பார்க்காது தான் நடந்தவைகளை யெல்லாம் கண்ட மாதிரி கூறுவரும் பணக்காரனொருவனும் சாக்ஷிகளாக வரவழைக்கப்பட்டனர் என்று கொள்வோம். அவ்வேழை தான் சத்திய வந்தனுகையால் நடந்தவற்றை ஒன்றும் மறைக்காது கூறுகிறான். எதுவமே நேரில் காணாத பணக்காரனோ ஏழை சொன்னதற்கு முற்றும் மாறாகச் சாக்ஷியம் சொல்கிறான். இதில் ஏழைசொல் மதிப்பற்றுத் தள்ளப்படுகிறது. ஏனெனில், ஏழைக்கு அதிக பிரபலப்பெயரில்லை. பணக்காரனோ பலருக்கும் அறிமுகமானவன். அவன் பேச்சிற்கு சிறிது மதிப்பு எக்காலத்தும் வைப்பார்கள். அவன் கூற்றே முடிவில் உண்மையாகக் கொள்ளப்பட்டு விடுகின்றது. இது வறுமையின் கொடுமைகளில் ஒன்று.

சிற்சில சமயங்களில் சிலர் இக்கொடிய வறுமையில் பணக்காரர்களின் கையில் சிக்கித் தங்களுக்குக் கேடு காலத்தை விளைவித்துக் கொண்டிருக்கின்றனர். வறுமையின் கொடுமையினுல் பணக்காரனின் பேச்சை சிரமேற்றாங்கி தங்கள் மனச்சாட்சிக்கு விரோதமாக எத்தனைபேர்கள் மிகவும் மானக்கேடான விஷயங்களுக்கு தலையசைத் திருக்கின்றனர். பிறர் பொருளை அபகரிக்க முற்படுவதே வறுமையினுலன்றோ? வறுமை செய்ய வொண்ணுதவைகளையும் பணத்தின் பொருட்டுச் செய்யவைக்கின்றது. ஆனுல், வறுமைச் சேற்றிலிருந்து தான பெரிய மேதாவிகள் உலகில் தோன்றி யிருக்கிறார்கள். வறுமை யொருபக்கம் கிடக்க, தன் ஓயா முயற்சியை மற்றொரு பக்கம் நடத்திச் செல்வோனைக் கடைசியில் வறுமையானது விட்டு விலகி ஓடி விடுகிற தென்பது உலகறிந்த உண்மை.

ஃ

## சுண்ணும்புக்கும் பொன் மதிப்பு.

வீட்டில் சுண்ணும்பு இல்லாமல் பக்கத்திலிருக்கும் கடைக்குச் சென்று வாங்கிவரவேண்டுமென்றாலும், கடையோ அதிக தூரம். பக்கத்து வீட்டில் வாங்கலாமென்றால், பக்கத்தில் வீடே கிடையாது. நடுக்காட்டிலே தனி பங்களா. கடைக்குச் சிரமப்பட்டுச் சென்று வாங்கிலும் அங்கும் சிறிதே யிருப்பதால், கடைக்காரனும் கொஞ்சமே கொடுத்துக் கையை விரிக்கிறான். அச்சிறிய அளவு சுண்ணும்புக்குப் பொன் மதிப்பு ஏற்படுகிறது. வீடு கட்டுவதற்குக் காரைக்காக சுண்ணும்பு வாங்குவதில் ஒரு பெட்டி (புறை) சுண்ணும்புக்கு ரூ. 3-8-0 போல் விலையாகிறது. அங்கும் சுண்ணும்புக்குப் பொன்மதிப்பு தான்.

"உளத்தோ டுளஞ்சென் றொன்றிடிற் பின்னர்
வியர்த்தமே செய்கையும் மொழியும்."




# வீட்டுப் புராணம்!



ஏதடா அப்பா! நம்ம விகடன் புராணப் பிரசங்கத்தைத் தொடங்கிக் கொண்டானே என்பீர்கள்! விகடன் என்றைக்கும் இம்மை மறுமை என்ற இரண்டு உலகத்துப் புராணத்தையும் சேர்த்துச் சொல்வதே வழக்கம். அதிலும் இவ்வுலகத்துப் புராணக் கதைகளைத் தொனப்புவதுதான் அதிகம்! "வீடு பெறநில்" என்பது ஔவையார் பேச்சு! எவ்வெப் பொருளோடு கூடி நின்றாயோ அவ்வப்பொருளிலே அதே சமயத்தில் தானே சம்பந்தமோ—பற்றுதலோ இல்லாமல் உன்னை விலக்கிக்கொண்டு நீ துறவறத்திலே வேரூன்றி நிற்கக்கடவாய் என்பது இதன் பொருள். எந்தப் புராண சாஸ்திரங்களை நோக்கினும் "வீடு" என்னும் மோக்ஷம் அடைவதையே விவரித்துச் சொல்லும். இது அந்த உலகத்துச் சங்கதி! விகடன் இப்போது அளக்க வந்ததோ இந்த உலகத்து வீட்டின் சமாசாரம்! மேல் உலகத்தின் சங்கதிகளைச் சொல்லுகிறவர்களுக்கு "சாஸ்திரி" என்பார்கள்! இந்த உலகத்து சங்கதியை உண்டாக்குகிறவர்களுக்கு "ஸ்திரீ" என்பார்கள்! வீட்டுப் புராணம் ஸ்திரீகளால் தான் தயாராகிறது என்பது யாருக்குத்தான் தெரியாது? விகடன் இந்த தடவைக்கு வீட்டுக்குள் நடக்கும் புராணத்தைச் சொல்லாமல், வீடு கட்டுகிற புராணத்தை மட்டும் விவரிக்கிறேன்! "வீடுபெறநில்" என்றால், என்னுடைய விகட அர்த்தத்திலே, இவ்வுலகில் எப்பாடு பட்டாயினும் சொந்தமாக ஒருவீடு—குடிசையை உன்னுடையதாகப் பெற்றுக்கொள் என்பதாம்! "வீட்டைக் கட்டிப்பார், கல்யாணம் பண்ணிப் பார்" என்பது பழமொழி. ஒவ்வொரு அநுபவமும் பட்டுப்பார்த்தால் தான் தெரியும்! இந்த இருவகை அநுபவங்களும் மிகப் பெரிய பெரிய சங்கதிகள்!

ஃ

முதலிலே வயிற்றுக்குக் கஞ்சியில்லா விட்டாலும், உட்கார்ந்து குந்துவதற்கும், கால்களை நீட்டிப் படுப்பதற்கும், ஒரு நோய் நொடி வந்தால் மற்றவர்கள் நோட்டம் சொல்லாமல் கண்ட இடத்தில் தன் இஷ்டப்படி கழிந்துகொண்டு புறளுவதற்கும், கிடைத்ததைக் கொண்டுவந்து அடுப்பு மூட்டி உண்பதற்கும் தனக்

அவரோ பிறர்சொற் கேட்பவர்; எடுப்பார் கைப்பிள்ளை; தடுப்பார் யாரே?

கென்று ஒரு வீடு சொந்தமாக வேண்டியிருக்கிறது! வீடு இல்லாத ஏழை எளியதுகள் படும் பாட்டையும் கேவலத்தையும் பார்க்கப்போனால், இந்த சென்னையிலே, ஒரு கனவான் வீட்டு லாயத்திலே கட்டப்பட்டிருக்கும் குதிரைக்குஇருக்கிற சௌக்கியங்கூட மனிதர்களுக்கு இல்லாத அவ்வளவு கஷ்டத்தையும் துன்பத்தையும் அனுபவிக்கிறதாகத் தெரிகிறது! முன்னே மூன்று குடித்தனமிருந்த ஒரு வீட்டில் இப்போது ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு முப்பது குடித்தன மிருந்தாலும் கேள்வி முறையில்லை! ஏழை ஜனங்கள் என்ன செய்வார்கள் பாவம்! அவரவர்களின் வருமானத்துக்குத் தக்கபடி சிறு சிறு அறைகளில் தங்கிக் குழந்தைகளோடு வசிக்கவேண்டி யிருக்கிறது! முன்னே ஒரு ரூபாய் வாடகைக்குக் கிடைக்கக் கூடிய ஒரு அறைக்கு இப்போது மூன்று அல்லது மூன்றரை ரூபாயாவது கொடுத்துத்தீர வேண்டியிருக்கிறது! இந்த அந்தஸ்தில் ஒருவன் இரண்டு மூன்று அறைகளை வாடகைக்கு எப்படி அமர்த்திக்கொள்ள முடியும்? இவனுடைய சம்பளமோ குடிக்கூலிக்கே போதாவிட்டால் உண்ண உடுக்க என்ன செய்வது? இதே நிலைமையில் பின்னும் இரண்டு மூன்று பிள்ளை குட்டிகளைப் பெற்றுக்கொண்ட தாய் தகப்பன்மாருக்குக் கால் நீட்டக்கூட இடம் கிடைக்காத நிலைமையில் இந்த மனிதப் பிறவிகள் படும் கஷ்டத்துக்கோ அளவில்லை!

ஃ

இது மாத்திரமா? ஏழைகள் வசிக்கும் சந்து பொந்துகளிலுள்ள குடிசை வீடுகளெல்லாம் பணக்காரரால் வாங்கப்பட்டு அந்தக் குடிசைகளிருந்த இடத்தில் பெரிய பெரியலாயங்களும், மோட்டார் வண்டிகள் வைக்கும் பெரிய பெரிய காடிகானுக்களுமாக மாறி விடுகின்றன! பத்துசெட்டு குடிசைகளை இடித்துத்தள்ளிய இடத்தில் ஒரு மாடிவீடு விளங்குகிறது! போதாக்குறைக்கு முனிசிபாலிட்டிச் சாமிகள் சந்து பொந்துகளைச் சீர்திருத்திப் பெரிய ரோட்டுகளாக்கிச் சுகாதார வசதிகள் செய்விக்கிறோமென்று அநேக வீடுகளை இடித்துத் தள்ளி விடுகிறார்கள்! அவ்வளவு வீடுகள் எடுபட்டுத் தரைமட்டமானதற்குப் பதிலாக வேறு இடங்களாவது, சேரிகளாவது ஏற்பட்டிருக்கிறதா என்று பார்த்தால் ஆண்டவனே அதையும் காணோம்! எடுபட்டுப்போன அத்தனை வீடுகளிலும் வசித்த ஜனங்கள் மிச்சம் இருந்த வீடுகளிலேயே நுழைந்துகொள்ள நேரிட்டுக் கும்பல் பெருத்து வாடகையும் ஏறிவிடுகிறது! இதனாலே முன்னே இரண்டாயிரத்துக்கும் விலை போகாமலிருந்த ஒரு வீடு இப்போது ஐயாயிரம் ரூபாய்க்கு மேலும் விலையேறி விட்டது! இந்தக் கையில் வாங்கி, அந்தக் கையில் அதிக லாபத்துக்கு விற்கிற வீட்டு வியாபாரமே தற்போது பலத்துப்போ யிருக்கிறது! இந்தக்கோரமான நிலைமையில் ஒருவர்மேல் ஒருவர் விழுந்து அதிகமான விலையைக்கொடுத்து ஒரு வீட்டை வாங்கி, அதை அடியோடே இடித்துத் தரையாக்கி விட்டுத் தங்கள் பிளான்படியே சொந்த வீடு கட்டிக்கொள்ள முந்துகிற சீமான்களுக்கும் குறைவில்லை! எப்படியோ அவர்களுக்குப் பணம் கையிலிருக்கிறது! அதை வைத்துக்

உழைப்பில் ஓயாது நில்; நல்லொழுக்கமே நீ செல்லும் வழி; நட்பில் உறுதிகொள்; கடமையில் ஆழ்ந்த கருத்து வை. எதிலும் ஒரு படிப்பினையை அறியக் கற்றுக்கொள்.

கொண்டு என்ன செய்வதென்று தெரியாமல் தங்களுடைய பணமே மண்ணு, மண்ணே பணமென்று நினைத்துக்கொண்டு ரூபாய்க்கு ரூபாய் எடையாக சிமெண்ட் விற்றாலும் சரி, ரூபாய்க்கு ஒரு புறை சுண்ணும்பு விற்றாலும் சரி—எப்படி யானாலும் வீடு கட்டி விடுவதே சரியென்று ஒரே தீர்மானம் வைத்து முடித்து விட்டு, தங்களுடைய செலவு இவ்வளவு பிடித்ததென்று ஒரு கணக்குப்பட்டியும் தயார்ப்படுத்தித்தாங்கள் கட்டிய வீட்டுக்கு ஒரு மதிப்புத் திட்டத்தையும் போட்டு, அதற்கு மேலும் விலை வரும் என்ற நம்பிக்கையும் கொண்டு விடுகிறார்கள்! இது செல்வம் பெருத்தவர்களின் கூத்து! இனி, வீசுடனுகிய என்போன்ற தலை காய்ந்தவனின் கூத்துகளை எடுத்துக் கொள்கிறேன்!

ஃ

அட ஆண்டவனே! என்போன்ற ஏழை ஏதோ தான் இருக்கிற இடத்தையே கொஞ்சம் சீர்திருத்திக்கொள்ளலாமென்றெண்ணி முயற்சி எடுத்துக்கொண்டு, பணச்சையும் முடி போட்டு வைத்துக்கொண்டு, வெளியே போய் சுண்ணும்ப விலையைக் கேட்டாலோ அடிவயிற்றில் நெருப்பு விழுகிறது! செங்கல் விலையோ தங்கவிலைக்குச் சமமாக இருக்கிறது; ஓட்டு விலையைக் கேட்டுவிட்டாலோ வீட்டுக்குத்திரும்பச் சொல்லுகிறது! மரத்தின் விலையைக் கேட்கும் போதே சுரம் வரும்போலிருக்கிறது! சேற்று மண்ணே மாற்றுத்தங்கம்! இத்தனைக்குங் கஷ்டப்பட்டுக் கூடிய வரையில் சாமான்களைச் சேகரித்துக் கொண்டு கொல்லன் தச்சனைக் கூப்பிட்டாலோ, அவர்களுக்கு எட்டுச் சிற்றான் கூடவே தயார் செய்து கொடுக்க வேண்டி யிருக்கிறது! ஊரான் பணம் தானே என்று தங்களுக்கு வேண்டியவர்களை யெல்லாம் வேலைக்கு அழைத்துக்கொண்டு வந்து அவர்களுக்கெல்லாம் கூலி அளக்கச்சொல்லுகிறார்கள்! வேலையில் எவ்வளவு சூனியமாயிருந்தாலும் தலையில் பாகையும், காவில் சோடும் சோக்கும் இருக்கிறவர்களெல்லாம் கொல்லத்துக்காரனே!

ஃ

இதிலே மண், செங்கல், சுண்ணும்பு விலைகளிலே கொஞ்சம் ஏமாறி அதிகப்பணம் கொடுத்துவிட்டாலோ, அதைத் திரும்பப்பெற முடியாது! அவ்னவனும் பணத்தை முடிந்து கொண்டு ஓடி விடுகிறவனுயிருக்கிறான்! பிறகு அகப்படுவதும் இல்லை! அவனுக்கும் கொல்லனுக்கும் ரகசிய உறவு—சிநேகம்! அதிகம் ஏமாறித் தந்த பணம் போனதுபோனதுதான்! இவ்வளவுக்குந்தான் உடன்பட்டுவிட்டோமே, இத்தோடாவது ஒழிந்து விட்டதா? எவ்வளவு அரிய பெரிய வேலைகள் நமக்கிருந்தாலும் அவைகளை விட்டுவிட்டு இவர்களின் அருகிலேயே நின்றுகொண்டு அதை இதை எடுத்துக் கொடுத்துக்கொண்டும், சரியாக வேலை வாங்கிக்கொண்டும் இருக்கவேண்டும்! சிற்றான்களிலே ஒருவர் இருவர் மறைவான இடத்திலே கம்மென்று குந்திக்கொண்டு விடுவார்கள்! வெறுமனே நின்று கொண்டும் கிடப்பார்கள்! அங்கங்கே போய் அவர்களையும் வேலைக்கு ஏவ வேண்டும். இல்லாவிட்டாலோ எட்டு நாள் வேலை இருபதாவது நாளில்கூட முடிகிறதில்லை! மேலே கொஞ்சம் ஓட்டைக்குக் காரையைப் பூசுவதற்கு அந்த முழுப்பக்கத்தையே உதிர்த்து விட்டு வேலையை வளர்ப்பார்கள்!

---

புஸ்தகம் என்றால் உனக்கு அதிக பிரியமாயிருக்கட்டும்; பொழுதுபட்டு வீட்டுக்கு வந்ததும் வாசித்தபடி யிரு.

கீமே சிறிது இடிந்த சுவற்றைச் சரி செய்வதற்கு அந்த சுவற்றையே இடிக்கப் பார்ப்பார்கள்! ஒரு புது வாசற்படி வைப்பதற்கு அருகிலுள்ள பழய சுவரை அடியோடும் பெயர்த்துவிட்டுப் புது சுவர் எழுப்பத் தொடங்குவார்கள்! ஒரு வேலையைப் பத்து வேலை யாக்குவார்கள்! மத்தியானம் புசிக்கச் சென்றால் இரண்டு மணிநேரம் கழித்து மெதுவாக வெற்றிலைப் பாக்குடன் திரும்பி வருவார்கள்! சாயந்திரமாகிவிட்டாலோ ஒவ்வொரு கொல்லத்துக்காரனுக்கும் ஒன்று, ஒன்றேகால்ரூபாய்க் கணக்கிலும், சிற்றாள்களுக்கு ஐந்து, நாலு அணுக் கணக்கிலும், இன்னும் வேறு சிலருக்குப் பத்தணுக் கணக்கிலும் பையை உடனே அவிழ்த்தாக வேண்டும்!

ஃ

இத்தோடாவது விட்டதா? இல்லை, இல்லை! முனிசிபாலிட்டியாரின் சட்டதிட்டங்களும் வேறேயுண்டு! அதையெல்லாம முன்னதாகவே தெரிந்துகொண் டிருக்கவேண்டும்! முனிசிபல் ஆசாமிகள் வந்துவிட்டாலோ—இந்த மண்ணை இங்கே கொட்டியிருக்கக்கூடாது—அந்த கல்லுகளை அங்கே சேர்த்துவைத்திருக்கக் கூடாது—கால்வாய்த் தண்ணீர் போக வசதியில்லை—ரோட்டில் வண்டிபோக இடமில்லை—இது இப்படியிருக்கக்கூடாது—அது அப்படியிருக்கக்கூடாது—என்று அவர்கள் முகமுறைப்புக்குந் திருப்புக்கெல்லாம் ஒத்தவண்ணமாக நடந்துகொள்வதுந் தவிர, அந்தந்த அந்தஸ்துக்குத் தகுந்த கைப்பூசு வியாபாரமும் நடத்தப்படவேண்டும்! அட அப்பா! இவ்வளவு அரிய பெரிய மனிதப் பிறவியை அது உட்கார்ந்து தங்கியிருக்க ஒரு இடங்கூடச் சொந்தமாக இல்லாமல் தவிக்கும்படியாகப் பிறப்பிக்கச் செய்து, இவ்வளவு பெரிய பூமியையும் எவர்களுக்கோ சொந்தமாக்கிவிட்டு, மண்ணைத் தொட்டாலும் துட்டு கொடுக்கவேணும், மரத்தை வெட்டினாலும் துட்டு கொடுக்கவேணும், காற்று வெளிச்சம் வேணுமென்று ஜன்னல் வைத்தால் அதற்கும் துட்டு கரையவேணும்—இப்படியே மண்ணுக்கும் துட்டு, தண்ணீர்க்கும் துட்டு, நெருப்புக்கும் துட்டு, காற்றுக்கும் துட்டாக எல்லாவற்றிற்கும் துட்டுகொடுத்தே அனுபவிக்கவேண்டிய இந்தப் பாம சுகத்தில் பறக்கிற இந்த மானிடப்பிறப்பின் சிறப்பை விகடன் என்னென்று சொல்வேன்! ஒரு காசு செலவும் இல்லாமலே குருவி கூடு கட்டிக்கொள்கிறது! மனிதனோ தான் தங்குவதற்கு ஒரு வீடு கட்டப்போனாலோ படாதபாடாகி எவ்வளவு பணத்தை இறைத்தாலும் போதாததாய் விடுகிறது! இப்படியாக வீட்டின்பாடு இருப்பதினாலேதான் "சொந்தவீடு" என்றால் அதற்கு ஒரு புதுமகிமை ஏற்பட்டுக்கொள்ளுகிறது! பெண் விசாரிக்கப்போன இடத்தில் வீடு, உண்டா நிலம் உண்டா என்பதையே முக்கியமான பேச்சாக முதலில் கேட்கிறார்கள்! வீடு உடையவனுக்கு ஒரு தனி மதிப்புவைத்துக் கௌரவிக்கிறார்கள்! ஆகவே, இந்த உலகத்திலே நாம் தங்குவதற்கு ஒரு சொந்தவீடு எப்படியாவது தேடிக் கட்டிக்கொள்ளவேண்டும்; அப்படியே மறு உலகத்திலும் நமக்கு மோக்ஷமாகிய வீடு கிடைக்கும்

---

ஒரு வேலை செய்துகொண்டிருக்கும்போதே தனது பிற்காலத்தை நினைவுக்குக் கொண்டுவந்து அப்படி உயரலாம் இப்படி உயரலாமென்று நெடுக மனக்கோட்டைகள் கட்டி அதில் ஓர்வித இன்பமுற்றுத் தன்னைத்தானே மறந்ததும் தன்னை யறியாமலே ஸம்பவிக்கின்றது.

படியும் பார்த்துக்கொள்ளவேண்டும். இந்த இரண்டு வீடுகளும் மனிதவாழ்வுக்கு முக்கியம்! அவைகளைப் பெறுவதற்குள்ள பாடுகளையெல்லாம் கவனித்துப் பெருமூச்சுவிட்டால் ஒன்றுமே முடியாது! பாடுபட்டுழைத்தால் தான் வீடுகட்டி வாழலாம்! "இடம்பட வீடிடேல்" என்பது ஔவையின் வாக்கு! அளவுக்குமேற்பட்டு வெற்றிடமுண்டாயிருக்கும்படி நீ வீட்டைப் பெரிதாகக் கட்டாதே என்பது இதன் கருத்து! கட்டிவிட்டுக் கடன்படாதே என்பது விகடன் சொல்! 'சிறுகக்கட்டிப் பெருகவாழ்' என்பது பெரியோர்களின் அனுபவ மொழி! கேட்டால் கேளுங்கள்! விட்டால் விடுங்கள்! உங்கள் பாடு! ராம்! ராம்! சுபம்! சூ!! சுவாஹா!!!

## தன்மதிப்பான நினைவின் தன்மை.

எந்தவிதமான சங்கடம் நம்மைக் கௌவிப் பிடித்துக்கொண்டாலும், அப்பிடிப்பினின்றும் விடுவிக்கப் பெறுவதற்குப் பிறர் துணை தேடிநிற்கும் வழக்கமோ நம்மிடமில்லை. பிழைத்தால் நாமே பிழைத்து நன்னிலையடைவோம். இல்லையேல் இறந்து படிந்து பிடிசாம்பலாவோம். இறப்பதற்கு எப்படிப் பிறர் துணை தேவையில்லையோ, அதேமாதிரி மானமுடன் வாழ்வதற்கும் பிறர் சகாயம் வேண்டாம் என்கிற பிடிவாதப் பித்தே நம்மிடம் குடிகொண்டுவிட்டது. இதை மாற்றுவதற்கு எவ்வளவு முயற்சி செய்தாலும், இந்தப் பாழும் மனம் திரும்பேனென்கிறது. என் செய்வோம்! (நகர தூதன்.)

வெளிவேஷத்தினாலேயே மயக்கி அக்ஷயபாத்திரமென்றுபிக்ஷை எடுத்து, வயிறு வளர்ப்பதையே தொழிலாகக் கொண்டவர்களால், 'பாகவதர்கள்' என்போர் பலரும் பரிகசிக்கப்பட நேர்கின்றது. திவ்யதேசங்களில் நடைபெறும் உற்சவ காலங்களில் கூடும்பாகவதர்களில், ஆங்காங்குள்ள ததியாராதனைக் கூடங்களில் திரண்டுகாத்துக் கிடப்பவர்களே பெரும்பாலோர்; சந்நிதியில்—பகவத் சேவைக்கெனக் காத்து நிற்பவர்கள் மிக மிகச்சிலரே. ப்ரஸாத தாஸ மூர்த்திகளாய் சஞ்சரிக்கும் 'பாகவதர்'களில் பற்பலர், பிறருடன் உரையாடும்போது வாக்கியத்திற்கு வாக்கியம் 'அடியேன்' 'அடியேன்' என்று சொல்லிக்கொண்டுவரக் கற்றுக்கொண்டாலும், சம்பிரதாய பரிபாஷைச் சொற்களை எவ்வெவ் வேளைகளில் எவ்வெவ்வாறு கூறவேண்டுமென்பதையும் நன்கு உணராது, பலவாறு கொட்டிக்குளறுவோராய் பரிகாசத்திற்கும்-சில வேளைகளில்—அவமானங்கட்கும்ஆளாகின்றனர். அனைத்தும, வயிற்று நாராயணனின் பக்தி விசேஷமே! இராமாநுசாது உபதேசங்களை உள்ளபடி உணர்ந்ததற்கு இணங்க உண்மை வைணவ வாழ்வு நடாத்தி வருவோர்இந்நாளில் எத்தனை பேர்? அவர்களுள்ளும் மதுமாமிஸாதிகளை யுண்ணும் பாகவத கோஷ்டிகள் எத்தனைஎத்தனையோ!

ஆரியூர்—வ. பத்மநாப பிள்ளை.




சொத்துள்ள பெண்ணுக்குக் கணவன் போய்விட, கணவனுள்ள பெண்ணுக்குத் தரித்திரம் மிஞ்சிவிடு கிறதாம்! ஃ

இப்பொழுது அழுகிறவர்கள் சிறிதுநேரம் கழித்துச் சிரிப்பார்க ளாம்! ஃ

பெண்குட்டி சிறியவளாயிருந்தா லும், அவளுடைய கண்ணெச்சில் பட்டது ஸர்வநாசமாய்ப் போகிற தாம்! ஃ

நான் வெளியூருக்குச் சென்று திரும்பிவரும்போது வீட்டில் புதுக் குழந்தை யில்லாதிருப்பதற்கு மனைவி மாதவிலக்கான நாளில் புறப்பட்டு விடுவதே நல்லதென்று விகடசித்தர் விளம்புகிறார்! ஃ

தங்கள் வேஷ்டியை அழுக்குபடா மல் வைத்திருக்கும் சிலர் ஊர் சொத்தை விரும்பும் அழுக்கைமட்டும் ஏன் கொள்ளவேண்டுமென்று ஒருவர் கேட்கிறார்! ஃ

ஊர் என்று உறுமியவனை இலகு வில் விடக்கூடாதாம்! சிரித்தபடியே அவனை மனதில் மறவாமல் வைக்க வேண்டுமாம்!

ஃ

பொய், ஏமாற்று, தந்திரங்க ளெல்லாம் கற்றுக்கொள்வது அப்பா வினிடத்திலும் அம்மா இடத்திலுந்தா னும்! ஃ

முக்கியமான வார்த்தைக்குப் பதில் கொடாமல் வேறுவார்த்தைகள் பேச ஆரம்பித்துவிடுகிற டக்கு சமர்த் தர்களிலே ஒருடஜன் பேர்வழிகள் விகடசபைக்கு வேண்டுமாம்!

ஃ

இவன் அவன் வீட்டுக்குப் போய் அவமானப்பட்டால், அப்படி அவமா னப்படுத்தியவன் இவன் வீட்டுக்கு, என்றைக்கும் வாராததலால், அது இவனுக்குப் பெரிய லாபமாகிவிருந்து செலவு நேராதிருக்குமாம்

ஃ

விகடக் கணக்கு:—சாந்தி முகூர்த்த அறைக்குள் 2-வீசை கற்கண்டு, 3-சேர் மிட்டாய், 5-பலம் பாதம் ஹல்வா, 3-தோலா சந்தனம் வைத் திருந்து மறுநாள் பார்க்கையில் 1-வீசை கற்கண்டு, 2-சேர் மிட்டாய், 1-பலம் பாதம் ஹல்வா, 1-தோலா சந்தனம் மட்டுமே யிருந்ததானால் மாப்பிள்ளையும் பெண்ணும் எவ்வளவு உபயோகித்திருக்கவேண்டும்?

ஃ

மற்றொரு கணக்கு:—இந்தத் தொரைக்கும் அந்த தொரசானிக்கும் ஆசை பெருத்துப்போய் நிமிஷத் துக்கு 10-வீதம் ஒருவருக்கொருவர் கால்மணி வரையில் முத்தங்கள் இட் டுக்கொண்டார்களானால் மொத்தம் முத்தங்கள் எவ்வளவு?

ஃ

பரமபத சோபன படத்திலுள்ள பாம்புகளை முற்றிலும் நீக்கிவிட்டா லென்ன என்று ஒருவர் கேட்டதற்கு, அப்பொழுது ஆட்டமே யில்லை யென்று விகடன் பதில் சொன்ன னும்! ஃ

படித்த படிப்புக்குப் பிழைப்பு கிடைக்காவிடினும், படிப்பு சொல் லித்தரும் வாத்தியார்களின் தலைப் பாகைகள் மட்டும் ரொம்ப பெரிதா யிருக்கிறதுகளாம்!

ஃ

வெளியிலிருக்கிற கடன்களை என் மனைவி நம்பமாட்டேனென்கிறா ளென்று ஒருவர் முறையிட்டுக் கொள்ள, அதற்கு விகடன் அவன் நகைகளைப் பாங்கியில் அடகுக்கு அனுப்பினால் அப்போது நம்பத் தொடங்குவாளென்று கூறினனும்!

# இரவல் படிப்பு.



புஸ்தக இரவல் வெகு மோசமானது. வெளியில் கொடுத்த புஸ்தகங்களைக் கணக்கில் சேர்ப்பதற்கில்லை. திரும்பிவரின் நமது அதிர்ஷ்டமே. அவ்விதம் வரும் புஸ்தகங்கள் கிழிந்தும், ஓரங்கள் மூலைகள் மடிக்கப்பட்டும், கசங்கியும் எண்ணெய்க் கறைகள் படிந்தும் பாழ்பட்டுக் கிடக்கும். நன்றாயிருந்த புஸ்தகங்களை இவ்விதம் இரவல் தந்து ஏன் கெடுத்துக்கொள்ளவேண்டுமோ? இரவல் பெறும் தந்திரசாலிகள் தாம் படிப்பதுடன் நில்லாது தம் வீட்டிலுள்ளோர் யாவரும் படித்தானபின்பு ஊர்மேய விடுகிறார்கள். நாம் ஒருவருக்கு ஒரு புஸ்தகம் இரவல் தந்திருக்க, அதை வேறொருவரிடத்தில் பார்க்கும்போது நம்மிடம் இரவல் பெற்றவர் அந்த வேறொருவருக்கு நமது புஸ்தகத்தைத் தந்திருப்பதாய் அறிய நேர்கிறது. அப்பொழுது நமது மனம் படுங் கஷ்டம் கொஞ்சமா?

ஃ

நம்மைக் கேட்கும்போது எப்படி இல்லையென்பது என்று தந்து, பிறகு வராமல் பலதரங்கேட்டு மனஸ்தாபப் படுவதைவிட, "என்னிடம் இரவல் மாத்திரமில்லை" என்று முன்னரே கண்டிதமாய்த் தெரிவித்துவிடுதல் நலம். அதில் மனஸ்தாபம் வரினும் நமது புஸ்தகம் நம்மிடமே யிருப்பதால் நமக்கு நஷ்டமில்லை. புஸ்தக இரவலினாலேயே சண்டையிட்டுப் பிரிந்தோர் வெகுபேருண்டு. பிறருக்குக் கொடுத்து இழந்த புஸ்தகங்களின் எண்ணிக்கையை நினைக்கையில் ஆவி துடித்துப்போகின்றது. பைண்டு செய்யத் தெரிந்தவர்களிடம் புஸ்தக இரவல் தருவது படுமோசத்திற்கேதுவாகும். ஒரு புஸ்தகத்தின் ஜீவநாடி போன்றுமுள்ள பிரதான பக்கங்களைப் பக்குவமாய்ப் பிரித்தெடுத்துவிட்டு ஒட்டி மறைத்து ஏதும் தெரியாதது போல் நம்மிடம் புஸ்தகங்களைக் கொடுத்துவிடுவார்கள். இந்த வஞ்சகத்தை நாம் எப்போதோ ஒருகாலத்தில்தான் அறியநேரும். அந்த முக்கிய விஷயத்தை வாசிப்பதற்காகப் பிறகொருசமயம் அப்புஸ்தகத்தைத் திறக்கும்போதுதான் அதில் அந்தப் பக்கங்கள் இல்லாமையை நாம் அறிய வேண்டியதாயிருக்கும்.

ஃ

புஸ்தக இரவல் வெகு பயங்கரமானது; ஆபத்தானது; திரும்பப் பெறமுடியாத கனத்த நஷ்டத்தையும் உண்டாக்கவல்லது. தாங்கள் பணம் கொடுத்து வாங்காமலே இரவலில் வாசித்துவிடுவோர்தான் அதிகம். பெரிய பணக்காரப் பரமேசுவரர்களும் நாராயணர்களும் இவ்விமே இரவல்—இனம் வகைக்காக ஊர் சொத்துக்கு அலைவது பெரிய வெட்கக்கேடு! ஒரு அணா கொடுத்து ஒருவர் தினசரிப் பத்திரிகையை ரயிலில் வாங்க, அதை அருகிலுள்ளோர் இலவசத்தில் படித்து

---

ஆத்திரத்துடன் எழுந்திருக்கிறோம்; நம்விருப்பம் சித்திபெறுமைக்காகக் கண்டபடி தூஷிக்கிறோம்; சினத்தால் கொதிக்கிறோம். பிறகு நாம் செய்வதோ ஒன்றுமில்லை. நமது கொதிப்பும் ஆறிவிடுகிறது. இவ்விதம் எந்தெந்த விஷயங்களிலே யென்று நீங்களே நினைத்துப் பாருங்கள்.

விடவெண்ணிப் பக்கத்தில் நெருங்கி உட்காருகிறார். ஒருசமயம் இவ்விதம் நேர்ந்தபோது உடனே நாம் பத்திரிகையை மடித்து வைத்துக்கொண்டோம். அருகிலிருந்தவர் அதை வாசித்துவிட்டுத் தருகிறேனென்றார். அதற்கு நாம், ஒரு அணு தந்து இதைப் பெற்றோம்; தாங்கள் காலணு தள்ளி முக்காலணுவுக்கு வாங்கிக் கொள்வதாயின் கொடுத்துவிடுகிறோமென்றதற்கு அவர் மௌனமாக இருந்துவிட்டார். மாதஸஞ்சிகைகளை இரவல் கொடுக்கும்அநியாயத்தைவிட வேறு அநியாயம் காணமுடியாது. எவ்வளவு நட்பும் உறவுமாயிருப்பினும் புஸ்தக இரவலுக்குமட்டும் இடந்தராதிருப்பதேஉத்தமமாகும். இரவல் பெற்று மோசம் செய்யும் சண்டாளத்தனத்தை நண்பர்களும் உறவினரும் விட்டுவிடக்கடவர்.

கடலூர்—வெ. இராமச்சந்திரன்.

## குழந்தைகளின் நிஷ்களங்கம்.

சாக்கடைத் தண்ணீரோ, கழனிநீரோ, பரிசுத்தமான தண்ணீரோ எல்லாம் குழந்தைகளுக்கு ஒன்றுபோலத்தான். அவர்கள் அவைகளுக்கு வெவ்வேறு மதிப்பு கொடுப்பதில்லை. எல்லாவற்றையும் நிஷ்களங்கமாகவே பருகிவிடுவர். பாயிலும் சரி, மெத்தையிலும் சரி, வெறும் நிலத்திலும் சரி அவர்களுக்குத் தூக்கம் வந்துவிடும். தன் தாய், பிறர்தாய், நமக்கு சொந்தமல்லாதார் என்று ஒன்றும் கிடையாது. எல்லோரும் தன்னைச் சுமந்து பாலூட்டியவர்களாகவே எண்ணிவிடுகிறார்கள். இந்த நிஷ்களங்கமான தன்மை பிறகு பெரியவர்களானபின் ஏன் இருப்பதில்லையோ ?—ஏன் மாறி புத்தி விபரீதமாகி விடுகின்றதோ ?

தூரதேசவாசியாகிய ஒரு கணவனின் கடிதம்:—"என் பிராணநாயகியே! நீயும் பிள்ளைகளும் விடைபெற்றுப் போனபின் உங்கள் பிரிவை ஆற்றியிருக்க எனக்குத் தாளவில்லை......நான் வெளியேபோய்க் களைத்துவரும் வேளையெல்லாம் என்னைக் கரிசனமாய்ப் பார்த்த உன் அருமை முகத்தைப்போல் இங்கு யார்முகமும் இல்லை. நம் பிள்ளைகள் எல்லாரையும் உன்னைச் சூழவைத்துக்கொண்டு ஒவ்வொருவராய் அழைத்து எனக்காக முத்தங்கொடு."

குழந்தைகளை அவமானப் படுத்துவதெப்படி ? அவர்களைத் துகில் உரிந்து நிர்வாணிகளாக்கி அவமானப்படுத்துவதா ? அவர்கள்தான் எப்போதுமே நிர்வாணிகளாகவே இருக்கிறார்களே? அவமானம் என்பது இன்னதென்று அவர்கள் உணராத நிலையிலிருக்கையில் அவர்களை எப்படி அவமானப்படுத்துவது ? குழந்தையும் ஞானியும் மானவமானங்களை யுணரார். இவ்வுலகிலிருந்தும் இல்லாத நிலைதான்.

# ஒழுக்கத்தவறினைச் சகியாமை.



இந்தக் கதை பிரான்சு தேசத்தில் பாரீஸ் நகரில் நடக்கின்றது. லோர் ஹார்தேன் என்பவள் ஓர் அழகிய இளமடந்தை. "படுக்கை வீடுகள்" உள்ள வியபிசாரசத் தெருவில் அவள் வாசம். அவளை நாடக அரங்கத்திலும் காணலாம். அவளது நடிப்பும் முகமினுக்கும் குலுக்கும் எத்தகையோரையும் வசீகரிக்கக்கூடியது. அவள் வீட்டுக்கு வந்த காமுக விருந்தினரில் இருவர் என்றும் நிலையாய் இருந்தனர். அவர்களில் மோஸ்கு நகரப் பிரபுவின் மைந்தன் அந்த யுவதியின் வயிற்றில் தன்னையொத்த ஓர் அழகிய மானிட விக்கிரகம் தோன்றச்செய்தான். அது அவளது வியபிசாரத் தொழிலின் பரிசு.

ஃ

பிறந்த குழந்தையைத் தனக்குத் தெரிந்த ஒரு வைத்தியரின் மூலம் 'பிள்ளை வளர்ப்புக்காரி' யொருத்தியிடம் கொடுத்து வளர்க்கச்செய்தாள். அவனும் நன்கு வளர்ந்து ஐந்துவயதுச் சிறுவனானன். லோர்தேன் அடிக்கடி தன் குழந்தையினிடம் சென்று கொஞ்சுவாள். தாயினது இனிய பாசத்தின் முத்தங்களை அப்பாலகனுக்கு ஈவாள். அவன் கை நிறையப் பொன்னுணயங்களைக் கொடுத்துவிட்டுத் திரும்புவாள். திரும்பிப் பாரீஸ் நகரம் வந்ததும் தனது மானங்கெட்ட பழய வாழ்க்கையில் மயங்கிப்போவாள். அத்தருணம் தனக்கு ஒரு குழந்தையுண்டென்று அவள் எண்ணுவதேயில்லை.

ஃ

சிறுவனாகிய ழோர்ழ் கிராம பாடசாலையில் எண்ணும் எழுத்துங் கற்றுத் தேர்ந்து ஒன்பதாவது வயதுக்கு நெருங்கினான். அவனைக் கல்வியில் பின்னும் உயரச் செய்வதற்காக ஒரு தீவில் பாதிரிமார்கள் ஸ்தாபித்திருந்த கலாசாலைக்கு அனுப்ப முயன்றதில், அக்குழந்தை படிப்பு முடியும் வரையில் அந்தத் தீவைவிட்டு எங்கும் செல்லக்கூடாதென்றும், ஒரு முறை கூட பாரீஸ் நகரத்துக்குப் போகக் கூடாதென்றும், தாய்மட்டும் தன் குமாரனைக் கண்டு செல்லலாமென்றும் நிபந்தனைகள் விதித்தனர். அதற்கு ஹார்தேன் சம்மதித்தவளாகித் தன் குமாரனைப் பாதிரிமார்களிடம் ஒப்புவித்தனள்.

ஃ

எவ்வித துராப்பியாஸங்கட்கும் இடனில்லாத அந்தத் தீவில் ழோர்ழ் சன்மார்க்கத்திலும் தெய்வபக்தியிலும் வழக்கப்பட்டவனாகி மிக்க விவேகசாலியாய் வருந்திப்படித்து அங்குள்ள சிறுவர்கள் எல்லோரிலும் முதன்மையான ஸ்தானத்தை யடைந்தான். பிரதிவாரமும் தன் மாதாவுக்கு அன்புத்தேன் சொட்டச் சொட்ட அழகிய கடிதங்களை எழுதிவந்தான். அவன் கற்கவேண்டிய கல்வியும் ஒருவாறு பூர்த்திபெறவே, பாதிரிமார் அவனது அன்னைக்கு அவனது

---

"பளிங்கு பழித்த நெஞ்சாய்! உனக்குங் களங்கம் வந்த காரண மெதுவோ?"

படிப்பு முடிந்துவிட்டதென்றும், இனி அவனை ஒரு தகுந்த தொழிலில் அமரச் செய்வதே பிற்கால க்ஷேமத்திற்கேற்றதென்றும், ராணுவத்தில் சேருவதற்கு அவன் விரும்புகிறானென்றும், இப்போதைய விடுமுறையில் அவன் தாயினிடம் வருவானென்றும், பிறகு இஷ்டப்பட்டால் அவனை இராணுவக் கலாசாலையில் சேர்த்துக் கொள்வதாயும் தெரிவித்தனர். இக்கடிதத்தினைப்பெற்ற ஹார்தேன் உள்ளம் பூரித்தாள். அதற்கு அடுத்த வாரத்தில் தாயும் குமாரனும் சந்தித்து ஒருவரையொருவர் தழுவிக் கொண்டனர். ழோர்ழ் உத்தம குணங்களுக்கு உறைவிடமாய் விளங்கினான். அவன் பயின்ற இடம் மதத் தலைவர்களான பாதிரிமார்களிடமன்றோ? அதற்கேற்பவே, அவன் நல்லொழுக்கத்திற்கும் தெய்வபக்திக்கும் நாயகமாய் நின்றான்.

ஃ

வியபிசார மடந்தையான ஹார்தேன் தன் குமாரனின் வருகைக்கு முன்னதாகத் தன் வீட்டில் சில சீர்திருத்தங்களைச் செய்திருந்தாள். தன் காம ஆபாஸத்தைத் தன் மைந்தன் அறிந்துவிடாவண்ணம் எவரையும் தன் இல்லத்திற்கு வராதவாறு தடுத்துவிட்டாள். தானும் உத்தம வநிதையாய் நடிக்கத் தன்னால் இயன்றளவும் முயன்றாள். குமாரனும் தாயுமே அவ்வீட்டினில் அன்பு பெருக வசிப்பதாயினர். தாயின் அன்பை ழோர்ழ் நன்கு சுவைத்தான்.

ஃ

ஒரு துன்மார்க்க ஸ்திரீ எத்தனை தினங்கட்கு நற்குணவதியாய்த் தன்னைக் காண்பித்துக்கொள்ள முடியும்? பழைய வியபிசாரப்பேய் ஹார்தேனைப் பிடித்தாட்டிற்று. இந்தப் புதிய கட்டுப்பாடுகளுடன் தனித்துக்கிடக்க அவள் மனம் விரும்பவில்லை. காமச் சுவையில் பழகிப்போன உடல் மீண்டும் மீண்டும் அந்த சுவைத்தாகம் பிடித்து அதற்கு ஆவலாதிகள் கொள்ளும். ஆகவே, நாளுக்கு நாள் தன் புதிய ஏற்பாடுகளைத் தளர்த்தி முன்போல் நடக்கத் துணிந்து விட்டாள். பல ஆடவரும் வந்துபோயினர். பழங் காதலனாகிய மோஸ்கு நகரப் பிரபு மைந்தனும் சாதாரணமாக வந்து கொண்டிருக்கத் தலைப்பட்டான். இத்தனைபேர்களும் எதற்காகத் தன் அன்னையிடம் வருகின்றனரென்பதை சன்மார்க்கத்தின் குழந்தையான ழோர்ழ் அறிந்தானில்லை. அவனுக்குக் கபட ஹிருதயமின்மையால் அதைப் பற்றி அவன் எவ்வித சிந்தனையும் செய்யவில்லை. ஆயினும் எல்லை கடந்த காம வெகுளியில் தன் தாயிடத்து வருவோர் நடந்துகொள்வதை இரண்டொரு தடவைகளில் கண்டு திடுக்கிட்டான் அப்பொழுதும் அவன் மனத்தில் விகற்பம் தோன்றவில்லை. பளிங்கனைய நெஞ்சினனாகவே சாதாரணமாய் இருந்தான்.

ஃ

ஒரு நாள் இரவு நடுநிசி. ழோர்ழ் மேன்மாடியிற் சயனித்து ஆழ்ந்த நித்திரையிலிருந்தான். கீழே இருந்த அறையொன்றில் ஹார்தேன் தன் ஆசைப்பிரியனுடன் மதன ஸல்லாபத்தில் மயங்கியிருந்தாள். இடையே அந்தப் பிரியனுக்கும் அவளுக்கும் ஏதோ சச்சரவு நேர்ந்து, அவன் தன கோபத்தை அங்கிருந்த தட்டுமுட்டு சாமான்களின்மீது காண்பித்து அவற்றை விட்டெறிந்தான். இந்த

---

நேயமும் அன்பும் ஆக்கப்படு பொருளாமோ? தானே இயற்கையாய் அமைவதன்றோ அது.

சப்தம் நித்திரையிலிருந்த குமாரனை விழிக்கச் செய்தது. அவன் விரைந்து கீழே வந்து தன் தாயின் அறைக்குள் செல்ல முயன்றான். ஆயினும் செல்ல வில்லை. அங்கு கண்டகாட்சி அவனைத் திடுக்கிடச் செய்யவே தன்னையே மறப்பதானான். அந்த அறையினுள் அவனது தாயும், அவளுடைய ஆசைப் பிரியனும் நிர்வாணமாய் காமத்தில் மயங்கிக் கிடந்தனர். அவர்கள் இரு வரும் இவனைக் கண்டதும் நாணித் தங்களின் உடைகள் இருக்கும் இடத் திற்கு ஓடினர். தாயாகிய ஹார்தேன் வஸ்திரந் தரித்தவளாய்த் திரும்பி வந்து, தன் மைந்தனை நோக்கி— "சீ! போ! இந்த வேளையில் என் அறைக்கு நீ வந்தது ஒழுங்கில்லை; திரும்பிப்போ; படுக்கச்செல்"— என்று கடுகடுத்து மொழிந்தாள். குமா ரனோ அருவருப்புடன் "அந்த அன் னியன் யாவன்?—அவன் இங்கு ஏன் வந்தான்? உன் அறையில் அவன் இருப்பானேன்?"—என்று வினவி னான். ஹார்தேனுக்குக் கோபம் பொங்கியது. தன் குமாரனைப் பிடித் துத் தள்ளிவிட்டு—"என் உத்திரவு பெற்றே அவன் இங்கு வந்தான்; நீ இதுபோன்றவற்றில் தலையிடுவது ஒழுங்கல்ல; மரியாதையாகச் சென்று விடு. படுக்கப்போ. இனி மாடியிலிருந் தும் கீழ் இறங்காதே"—என்றாள்.

ஃ

நற்குணங்களுக்கு நாயகமானவ னும், பாதிரிமார்களிடம் உத்தமமான சிக்ஷையில் ஞானப்பாலூட்டப்பெற்று வளர்ந்தவனும் ஆன ஜோர்ஜ் சிரம் தாழ்த்து தாயின் சொற்படியே மேன் மாடிக்குச் சென்றான். தான் நேரில் நிர்வாணமாய்த் தன் அன்னையைக் கண்ட காட்சியினின்றும், அதற்கு முன் தனக்கு எதிர்ப்பட்ட பல நிகழ்ச்சிகளையும் ஒன்று சேர்த்துக் கோர்த்துப் பார்த்துச் சிந்திக்கவே, தன் அன்னை ஒரு வியபிசார மடந்தை யென்றும், வியபிசாரத்தின் வழியா கவே தான் தோன்றியதென்றும், அதனால்தான் தனக்கென்று ஒரு தந்தையைச் சொந்தமாகத் தான் பெற முடியாது போயிற்றென்றும் உணர்ந்தான். இந்த அவமானம் அவ னால் சகிக்கமுடியவில்லை. தாயின் ஒழுக்கத் தவறு பெரிய மானக்கே டென்றும், அந்த மானக்கேட்டின் பிரதிபிம்பமே தன் உருவமென்றும் எண்ண எண்ண ஆவிசோர்ந்து கதறி னான். முடிவில் தன்னையே தற்கொலை செய்துகொண்டு அந்த இரவிலேயே கடவுளிடம் சென்றுவிட்டான். தாயின் சொற்படியே அவன் உயிரு டன் மறுபடியும் மாடியிலிருந்தும் கீழ் இறங்கி வரவில்லை.

ஃ

மறுநாட் காலையில் பொழுது புலர்ந்து வெகுநேரமாகியும் தன் குமா ரன் கீழ் இறங்கி வாராததால் ஹார் தேன் மேன்மாடிக்கு விரைந்து சென் றாள். அங்கு அவள் கண்டதென்ன? அன்புள்ள மைந்தனாகிய ஜோர்ஜ் தூக் கிட்டுக்கொண்டு சவமாய்த் தொங்கிக் கிடப்பதை நோக்கினாள். ஐயோ! என்று அலறினாள். தன் ஒழுக்கத் தவறே தன் அருமைப் புத்திரனின் ஆவியைக் கொள்ளைகொண்டதென்று அவளுடைய நெஞ்சம் அவளுக்கு அறிவுறுத்திற்று. பிரேதமைந்தனை அணைத்துக்கொண்டு பிரலாபித்தாள். தன் பிழையை யுணர்ந்து கதறினாள். இரவில் அந்த உத்தம குமாரனைச் சிடு

---

மூத்த குமாரனுக்குத் தன் சொத்துகளில் பங்கு கிடைக்கும்படி ஏற்பாடு செய்துள்ள தந்தை, இளையகுமாரன் விஷயத்தில் எவ்விதம் அந்தப் பொறுப் பைக் கழித்துக்கொண்டுவிட முடியும்?

செடுத்துத் தூக்கியதை மறுபடியும் நினைத்துக்கொண்டாள். அவன் அவளுக்கு ஈன்ற தாயாக இருந்த அன்பெல்லாம் அத்தருணத்தில் ஒன்ருய்த் திரண்டு அவன் முன்னே தோன்றிற்று. ஹார்தேனின் துயரம் சகிக்கொணுத எல்லை மீறிவிடவே, அவன் சித்த ஸ்வாதீனம் தவறிப்போய் பைத்திய ஆஸ்பத்திரிக்குச் சொண்டுபோகப்பட்டாள். அங்கேயே அவளுடைய மரணமும் நேர்ந்தது. ஒழுக்கத்தவறின் முடிவு இதுபோலும்!

## வாலிப வதனம்!

ஆ! வாலிபமே! உன் கம்பீரமும், அழகும், இனிப்பும், கண்டவர் மனங் கவர் வனப்பும் என்னே! என்னே! ஆ! அற்புத சொரூபமே! நின்னைப் பெற்றிருந்த காலந் தன்னில் நின் மாண்பினை அறியாதவனுயினேன்! காதல், வீரம், ஆண்மை யாவற்றிற்கும் நீயே இருப்பிடமாக நின்ருய் எவரும் என்னை விரும்பினர். எனது கேசங்கள் நாவற்பழம்போன்றுங் கறுத்து எனது லாவண்ய சுகுமாரத்தை அதிகப்படுத்திற்று. என் விரல்களின் நுனியில் மிக்க வலிமை ஏறி நின்றது. என் கால்நடை சுறுசுறுப்பில் இருந்தது. என்னை நூறு வயது வாழ்பவனென்று யாவரும் எண்ணினர். என் வாலிபம் எந்த உத்தியோக பதவியையும் நான் பெறத்தக்கோனுகச் செய்தது. எனக்குப் பெண் தர மறுத்தவர் எவருமில்லை. என் ஜாதகத்தின் பிரதிகளைப் பெற்றேகினோர் எண்ணிலர். எங்கும் எனக்கு மரியாதை கிடைத்தது. ஓ! நமக்கு வேண்டிய வயது இருக்கிறதென்றும், வேண்டிய சொத்துகளும் உயர்பதவிகளும் தேடிக் கொள்ளலாமென்றும் அந்த வாலிப வயதினில் நான் கொண்ட எண்ணங்களுக்கு அளவேயில்லை. இரண்டு மூன்று கரும்புகளை என் சிறு பற்களினுலேயே சரிசெய்துவிடும் வலிமையும் என்னில் நிலவியது. ஆனுல் இப்போதோ? நரைத்ததலை, பழுத்த உடல், பொக்கை வாய், தளர்ந்த நடை, வாடிப்போன முகம், சோர்ந்த நெஞ்சு, மெலிந்த தோற்றம், நீங்கா நோய், பார்வை மழுங்கிய கண்கள், எவரும் வெறுக்கும் விகார விருத்த வயது—ஆ! இவற்றின் கோரம் என்னே! ஆ! என் இனிய வாலிபமே! நீ இனித் திரும்பாயோ! போனது போனதேதானே! வாலிபத்திற்குப் பதிலாகப் புகழும் சொத்துகளும் இப்பொழுது கிடைத்துள்ளன. ஆயினும், இவை எல்லாம் உனக்கு ஈடாகுமா?

சிலஞ் சிந்தை கோலமனைத்துஞ் சாலவும் பொருந்துவது சிலருக்குத்தான்.






இன்று கூடிய நமது கடையில் ஆமவடைப் பண்டாரம் முதலில் பேசினர். ஒருவருக்கு இலவசமாக ஒரு வேலையைச் செய்து கொடுப்பதாகச் சொல்லிவிட்டு, பிறகு அவ்வேலையைச் செய்து கொடுக்கும்போது, 'அது தண்டவேலை' என்று மனம் சலித்துக் கொள்வதானுல் அத்தகையோரைப்பற்றி நாம் என்ன நினைக்கிறது என்று கேட்டார். "அந்த உண்மையன்பு இல்லையென்றும், தன் காரியார்த்தமாக அன்பு இருப்பதுபோல் காட்டுகிறதே தவிர, மற்றபடி பூரணமாகக் கபடம்தான்" என்றும் அல்லாபிச்சை பதில் கூறினுர்.

ஃ

"சம்பாத்தியம் என்ற சாக்கிலே சகோதர மனிதனை ஏய்க்கக் கற்றுக் கொள்வது ஒரு முறை. நல்ல கத்தரிக்காயுடன் சொத்தைக் கத்திரிக்காயையும் சேர்த்து விற்கத்தெரிய வேண்டு மென்பது வியாபார முறை. தன்னை நம்பியவனுக்கு எவ்வளவுக்கு வேண்டுமானுலும் 'பட்டுக் குல்லா' யிட்டு மோசம் செய்யலாமென்று உணர்ந்து கொள்வது வஞ்சகமுறை. கடைசியாகப் பார்ப்பின் தட்டோட்டக்காரனுக்குத்தான் தயிரும் சாதமும் கிடைக்கிறது. விஸ்வாசக்காரனுக்கோ வெந்நீரும் பருக்கையும் தான் கதி" என்ருர் ஆழாக்கு அரிசியார்.

ஃ

"தற்போதைய படிப்புக்குக் குமாஸ்தா படிப்பு என்று பெயர். 'குமாஸ்தா' என்ருல் 'கை' என்று அருத்தம்; 'தலை' என்று அருத்தமில்லை. உலகத்தில் மற்ற ஜாதியார் பெறும் படிப்பின் நோக்கமென்ன? படர்ந்தநெற்றியும், உயர்ந்த தோளும், விரிந்த மார்பும், ஆசானுபாகுவும், நேர்த்தியான உருவமும், விசாலமான கண்களும், அழகு வாய்ந்த அருள் நிறைந்த முகமும், அஞ்சா நெஞ்சும், அளவிலா அன்பும், மிகுந்த பொறுமையும், கூரியபுத்தியும், குலத்திலே மதிப்பும், கல்லையுருக்கும் கானமும், உறுதி மொழியும், உறக்கமில்லாத ஊக்கமும் உள்ள மனிதர்களாக்குதல் எல்லாத் தேசத்தின் படிப்பினது நோக்கமாகும். அப்படியிருக்க, எழுதுகோலைப் பிடிப்பதற்கு மாத்திரம் கற்றுக்கொடுக்க வந்துள்ள தற்காலப் படிப்பின் குணமும் நோக்கமும் எவ்விதமிருக்கும்?" என்று அந்தோனி முத்து இயம்பினர்.

ஃ

"தனக்கு எவ்வளவோ உதவியிருப்பவனைப்பற்றி 'நன்றியற்றவன்' என்று ஒருவர் இகழும்போது, அவ்விதம் கேவலப்படுத்துவோரும் நன்றியற்ற மனுஷ்யரா யிருப்பதால் தான் தன் குணத்தையே பிறர்மீதும் ஏற்றித் தாழ்த்த நேரிடுகிற"தென்று தொந்திச் செட்டியார் நவின்ருர்.

ஃ

"பயத்தை ஜெயித்தவனுக்குத் தான் தைரிய குணம் உண்டாகும். நகர வாசியின் தைரியம் போதாது. அவன் தன்னை ஒருவன் எதிர்ப்பின

உடனே போலீஸாரை உதவிக்கு அழைப்பான். தானே சமாளித்துக் கொள்ள அவனுக்கு சக்தியில்லே. காட்டில் வசிப்பவனே பயம் என்பதையே கண்டறியாதவன். எந்த இருளிலும் அவன் துணிந்து செல்வான். எவரேனும் எதிர்ப்பின் தன் தோளின் பலத்தைக் காட்டுவான். தன் கண்ணுக்கு முன்பு தோன்றும் எந்த விஷ ஜெந்துவையும் அங்கேயே கொன்று புதைப்பான். நகரவாசிக்கோ இருளிற் செல்ல பயம்; துணைக்கு ஒருவர் வேண்டும். ஒரு தேளைக் கண்டதும் அலறுவான். அதைக்கொல்ல அவனுக்குத் தைரியமில்லே. பயம் விலகினுலன்றி தைரியம் மனிதனின் அருகே அணுகாது. ஆத்ம வளர்ச்சிக்குச் சாதனமான மதவைராக்கியம் ஒன்றே பயத்தைப் போக்கவல்லது. காட்டில் வசிப்பவனுக்குத் தெய்வ பக்தியிருக்கும். நகரவாசிக்கோ பணம் சம்பாதிக்கும் அவசரத்தில் கடவுளைத் தொழக்கூட நேரமிராது" என்று புளியோதரை முத்து புகன்றார்.

ஃ

"உதவி செய்ய முன் வருவோர் நல்ல தருணத்தில் ஒரு சிறிது செய்தாலும், அது தக்க பயனைக் கொடுக்கும். தருணம் தவறி உதவி செய்வதும் செய்யாததும் ஒன்றுகும். ஒரு மனிதன் ஜலத்திலே மூழ்கித் தத்தளித்து உயிருக்கு மன்றுடும்போது அவனைக் காப்பாற்றிக் கரைசேர்ப்பது தான் தருணத்தில் செய்யும் உதவி. அதைவிட்டு, அவன் எப்படியாவது கரை சேரட்டும், பிறகு நமது அனுதாபம் தெரிவிப்போம் என்றிருப்பது அதர்ம உதவியாகும், ஒருவன் கஷ்டப்படுவது முழுமையும் செவ்வையாகத் தெரிந்திருந்தும், அந்த சமயத்தில் அவ்வறுமை யுடையவனின் சகோதரர்களும் சம்பந்திகளும் எவ்வித உதவியும் செய்யாமல், ஏதும் தெரியாதவர்கள் போன்று அவன் வீட்டில் விருந்தினர்களாக உட்கார்ந்து கொள்வதுடன், ஒரு வீண் சண்டையையும் ஆரம்பித்துக் கொள்கிருர்கள். இது கீழே விழுந்தவனை ஏறி மிதிப்பது போன்ற சங்கதிதான். எந்த உதவியும் பசித்த நேரத்தில் சாப்பாடு போடுவதுபோல் செய்யவேண்டும்" என்ருர் காலசகாயம் பிள்ளை.

ஃ

சிலர் ஒரு ஊருக்குப் புறப்படுகையில் அவர்களை ரயிலில் ஏற்றியனுப்ப அவர்கள் வீட்டிலிருந்து ஒரு வேலைக்காரனே, பந்துவோ, நண்பனே கூட வந்து அனுப்புகிருர்கள். பிறகு அவர்கள் போய்ச்சேரும் ஊரில், ஏற்கெனவே அவர்கள் வருவதைப்பற்றிக் கடிதம் எழுதியிருப்பதால், அவ்வூரிலுள்ளோர் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து காத்திருந்து சந்தித்து அழைத்துப்போகிருர்கள். இவ்விதம் பிறருக்குக் கஷ்டம் கொடுப்பானேன்—இதுவும் ஒரு கௌரவமா என்று பரங்கிப் பூசினியார் கேட்டார். அதற்கு மல்லிகைப்பூ மணவாள முதலியார்—அப்படித் துணைக்கு மனிதர்களையழைப்பது ஒரு கௌரவத்துக்கு அல்ல வென்றும், பெட்டி முதலியவற்றுடன் செல்வதால் அவ்விதம் பிறர் உதவி கோரவேண்டியிருக்கிறதென்றும், ஏதும் சுமையில்லாவிடில், எவரையும் தொந்தரிக்காமல் தாமே ரயிலுக்குச் செல்லக்கூடியவர்களே யென்றும், மேலும், இவ்விதம் ரயிலுக்கு ஒருவர் துணை வருவதும், போய்ச்

---

பதிலுக்குப் பதில் உடனே திட்டிவிடுகிறவனை நம்பலாம். ஏதுமே திட்டாமல் மனதிற்குள் வைத்துக்கொண்டவனை எந்நாளும் நம்பமுடியாது. நல்ல சமயத்தில் அதற்குப் பழிக்குப்பழி தீர்த்துக்கொள்வான்.

சேருகிற ஊரில் அங்கு அழைக்க ஒருவர் ரயிலடியில் வந்து காத்திருப்பதும் சிலருக்கென்றே அமைந்த செல்வாக்கின் அம்ஸங்களாகு மென்றும், அவர்களின் காலமுற்றும் அப்படியே மனுஷான் துணைகளோடும் ஆடம்பரமாய் நடக்குமென்றும், கடவுள் அவர்களுடைய அந்தஸ்துக்கு அப்படியாக அவர்களுக்கு நடக்கவேண்டுமென்று ஏற்பாடு செய்திருக்கிறாரென்றும், அதற்குத் தகுந்த யோக்கியதையும் அவர்களிடம் இருக்கவே செய்கிறதென்றும், எல்லோருக்கும் இப்படியான யோகம் அமைவதில்லையென்றும் கூறிமுடித்தார். இத்துடன், நமது கடையும் பூர்த்தி பெற்றது.

'பஹதூர்' பொன்வண்டுசெட்டியார்.

## நினைத்ததும் எதிர்படுதல்.

ஓரிடத்திற்குச் சென்று "அவர் இருக்கிறாரா" என்று ஒருவரைப்பற்றி விசாரிக்கையில், அவரும் வெளியிலிருந்து அதே சமயத்தில் அங்கு வந்துவிடுகிறார். நமது நண்பன் நான்கு நாளாக வரவேயில்லையே என்று நாம் நினைக்கையில் மறுநிமிஷமே அந்த நண்பன் நம் வீட்டிற்குள் வருகிறான். நாம் அவருக்குக் கடிதம் எழுதத் தொடங்குகையில், அதே வேளையில் நமக்கும் அவர் தம் ஊரிலிருந்து கொண்டு கடிதம் எழுதியவாறுள்ளார். நாம் ஒருவரது விவாகத்திற்குப் போக முடியாமல் மற்றோர் சமயம் அவரது வீட்டிற்குச் செல்லும்பொழுது, அதே தருணத்தில் அங்கு பெண்ணை ஆடிக்கு அழைப்பதான விசேஷமாயிருந்து அந்த வைபவத்தில் கலந்துகொள்கிறோம். தூர நாட்டில் நமக்கு வேண்டியவர் நோயுற்றால், அதே வேளையில் நம் மனத்திலும் காரணமில்லாமலே ஒரு வியாகூலம் தோன்றுகிறது. இவை யாவும் மானஸீகச் செயல்களாகும்.

எல்லோரும் லாட்டரிச் சீட்டுகள்போட ஆரம்பித்துவிட்டார்கள். லாட்டரிச்சீட்டுப் புஸ்தகங்கள் கேட்காமலே தபாலில் வலியவந்து குப்பைக் கூடைக்குப் போகின்றன. லாட்டரிச் சீட்டுக்குப் பணம் செலுத்துவோர் நடுவிலுள்ளவர்களை நம்பாமல் நேராக மணியாடர் செய்வதே சரி. பிறகு சீட்டு விழவில்லை என்று ஏமாறினால் வேதாந்தம் பேசிக்கொண்டு சமாதானமாக வேண்டியது.

சிலருக்கு ஒரு சண்டை சமரஸப்படக் கூடாதென்பது எண்ணம். அதற்கேற்றபடியே அவர்கள் செய்துவரும் காரியங்களில் அனுஷ்டித்துள்ள மனப்பான்மை இந்த எண்ணத்தைப் பின்பற்றியதாகவே இருக்கும்.

கோயில் வருமானங்கள் சோம்பித்திரியும் குருமார்களுக்கும், மடாதிபதிகளுக்கும், கோயிலைச்சுற்றி நிற்பவருக்குமே அதிகமாய்ச் செலவாகின்றது.




**சுப்ரமண்ய பாரதியார் அல்லது தமிழ் நாட்டின் தேசீய கவி:—**

இது ஓர் அரிய பெரிய ஆராய்ச்சி நூல். ஸ்ரீமான் திரு. சுத்தானந்த பாரதியார் அவர்கள் இயற்றியது. விலை ரூ. 1.

இந்நூல் தமிழ் நாட்டிற்கு ஒரு நல்விருந்தாகும். எத்தகைய கவிஞனும ஒரு காரணம் பற்றியே ஒவ்வொரு கவிதையும் இயற்றுவான். காரணமின்றி எந்தக் கவிதையும் தோன்றுது. கவிதை புனைவதற்கு வேண்டிய சரக்குக்கு ஒரு சந்தர்ப்ப காரணம் அத்துடன் இருக்கும். இவ்விதமே, ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியாரும் அவ்வக்காலங்களின் சந்தர்ப்பங்களுக்கேற்பத் தமது கவிதைத் தொழிலை நடத்திச் சென்றுர். ஒவ்வொரு கவிதைக்கும் அது எழுந்த சமயங்களையும் காரணங்களையும் விளக்கிக் கூறுதற்கு ஸ்ரீ பாரதியார் இப்போது இல்லை. ஆயினும், அவரது கவிதைகளை அனுபவித்துச் சுவைத்த நயத்தைப்பற்றிப் பேசுதற்கு வேண்டிய அறிஞர்கள் இருக்கின்றனர். அவர்களுள் ஒருவரான ஸ்ரீமான் சுத்தானந்த பாரதியார் தாம் அனுபவித்த கவிதையின் இன்பங்களை யெல்லாம் இந்நூலினுள் வெகு விரிவாகவும் விளக்கமாகவும் தெரிவித்துள்ளார். ஸ்ரீ பாரதியாரின் பாடல்களுக்கு இந்நூல் ஒரு தக்க உரை யென்னலாம். ஸ்ரீ பாரதியார் நெடுங்காலம் வறுமை வாய்ப்பட்டு வாழ்ந்து மடிந்தார். அவர் காலத்திற்குப் பிறகு அவரைப் பாராட்டுகின்றனர். தமிழ்நாட்டினர் கற்றறிந்த பெரியோர்களை ஆதரிக்கும் விதத்தை நோக்கில் வருந்தாமலிருப்பதற்கில்லை.

ஃ

**வேள்பாரி :—**

[ஸ்ரீமான் மு. க. காந்திதாஸன் இயற்றியது. விலை அணு 8.]

இது 28-பக்கங்கள் கொண்ட ஒரு சிறு நூல். 'பாரி'யின் சரிதத்தை வெகு அழகாகவும் இனிமையாகவும் விளக்கியிருக்கின்றது. நமது முன்னேர்கள் எவ்விதம் வாழ்ந்தனரென்ற அறிவு நமது தற்கால வாழ்க்கையைச் சீர்திருத்துதற்குத் துணை செய்யும். அதற்கேற்ற நூல்களில் இதையும் ஒன்றுகக் கொள்ளலாம்.

ஃ

**விஸ்வப்ரஹ்ம சங்கத்தின் முதலாவது ஆண்டு மலர் :—**

இந்த சங்கம் பர்மாவில் பிட்குவின் என்ற நகரில் ஏற்படுத்தப்பட்டுள்ளது. அச்சங்கத்தின் வெளியீடாகிய இந்நூலில் சங்கத்தின் அறிக்கையும், பல அரிய வியாசங்களும் அடங்கியுள்ளன. விஸ்வகர்ம குலாபிவிர்த்திக்கான வழியில் ஒவ்வொரு வியாசமும் நன்கமைந்துள்ளன. இதன் விலை அணு 8. எந்த ஸமூகம் தன்னை உயர்த்திக்கொள்ள நாடுகின்றதோ, அந்த ஸமூகம் மற்ற ஸமூகங்கட்கு ஒரு வழிகாட்டியாகவு மிருக்கும். இச்சங்கத்தின் அபிவிர்த்தியை நாம் மனஸ்பூர்வமாக விரும்புகிறோம்.

மேற்கண்ட புத்தகங்கள் யாவும் நமது அமிர்த குணபோதினி ஆபீசில் கிடைக்கும்.

# சென்றுபோன நாட்கள்.

## ஸ்ரீமான் ப. சி. கோவிந்தசாமி ராஜா அவர்கள்.



"அமிர்த குண போதினி" யின் நேயர்கள் ஸ்ரீமான் ப. சி. கோவிந்தசாமி ராஜா அவர்களை நன்கறிவர். அவர் எழுதிய பங்காதேவி, கமலாதேவி, லாலாதேவி, துளசிபாய் முதலியன நமது பத்திரிகையில் வெளிவந்துள்ளன. இன்னும் இரு சரித்திரங்களும் நமது கைவசமிருக்கின்றன. அவர் இயற்றிய மாகதவல்லி, பஞ்சாத்தினர், குடியின் கேடு முதலிய நூல்கள் இன்றைக்கும் யாவராலும் போற்றப்படுகின்றன. அவர் வரைந்த "காதற் கடிதங்கள்" தமிழ்ச்சுவை ததும்பியதாகும். வேறு பல நூல்களும் பாடல்களும் அவர் செய்திருக்கின்றார். எத்தனையோ அரிய விஷயங்கள் அவரால் எழுதப்பெற்றுப் பத்திரிகைகளில் வெளிவந்து மறைந்தன. ஸ்ரீமான் ராஜா அவர்கள் பண்ணுருட்டியில் பிறந்தவர். சென்னை பச்சையப்பர் கலாசாலையில் எப். ஏ. பரீக்ஷையில் தேறி பி. ஏ. வகுப்பில் வாசித்துக்கொண்டிருந்தவர். பழங்காலத்து நூலாசிரியர்களின் திருக்கூட்டத்தைச் சேர்ந்தவர். துரைத்தனத்தில் கௌரவமான உத்தியோக பதவியில் விளங்கியவர். மிக்க தன்மதிப்புள்ளவர். அன்புக்கன்றி மற்றெதற்கும் தலை வணங்காதவர். ஒழுக்கங் குன்றினோர் பெருஞ் செல்வராயிருப்பினும் அன்னோரை லக்ஷியம் செய்யாதவர். சத்தியவந்தர். தீனதயாளு. கடவுளை நம்பியவர்.

ஃ

ஸ்ரீமான் ராஜா அவர்கள் பெரிய நூலாசிரியராயினும், அவரது இல்வாழ்க்கை அத்தனை இன்பமாக இருக்கவில்லை. முதன்மனைவியை இழக்கக் கொடுத்தவர்களில் இவரும் ஒருவராவர். இவரது குமாரனாகிய வேணுகோபாலன் பி. ஏ. பரீக்ஷைக்கு வாசித்துக்கொண்டிருக்கையில் கடவுளிடம் சென்றுவிட்டனன். அப்புண் கடைசி வரைக்கும் அவருக்கு ஆறவேயில்லை. தன் முதன் மனைவியின் தங்கையையே இரண்டாவது மனைவியாகக்கொண்டு அப்பெண்ணரசியால் சில காலம் இன்பநலம் கண்டு மகிழ்ந்தார். நமது பத்திரிகைக்கு விஷயதானம் செய்துவரும் ஸ்ரீமான் P. G. குலசேகரனும், இருபெண்மணிகளும் இவ்வம்மையாரிடம் தோன்றியவராவர். முதல் தாரத்திற்கு இருபெண்களும் வேணுகோபாலனும் பிறந்தனர். பெண் குழந்தைகளில் ஒன்றும், வேணுகோபாலனும் தந்தையின் கண் முன்பாகவே காலமாயினர். கடைசியில் எஞ்சி நின்ற பெண்குழந்தையின் பெயர் மனோரஞ்சினி தேவி. இந்த சுகுமாரியாரும் நமது பத்திரிகைக்கு விஷயங்கள் எழுதிவந்திருக்கிறார். ஃ

---

சரியான சமயத்தில் தவறான முறையை அனுஷ்டித்து, அதனால் காரியத்தைக் கெடுப்பது விவாகம்போன்ற முக்கிய விஷயங்களில் தலையிடுவோரது இயல்பாகப் போய்விட்டது.

ஸ்ரீமான் ராஜா அவர்களின் காலம் ஸதா உத்தியோகமுறையில் வெளியூர் ஸஞ்சாரத்திலேயே சென்றது. தமது இளைய மனைவியைப் பிரிந்து வெளியூரில் தங்கிய நாட்களே அதிகம். அந்த இளைய மனைவி யாரும் தம் கணவரின் முன்பாகவே கண்மூடினர். ஆ! பெரிய துக்கம்! கடைசியாக, உத்தியோகத்தை விட்டு விட்டு அச்சுக்கூடம் ஸ்தாபித்துப் பத்திரிகை நடத்த முயன்ற ஸ்ரீமான் இராஜா அவர்கள் அவ்வெண்ணம் சித்திபெறுந்தறுவாயில் 26-5-1918ல் இறைவனின் திருவடிநீழலெய்தினர். ஒரு நூலாசிரியரின் வாழ்நாள் இருந்தவாறென்னே! அவருக்கு வயது 40-க்கு மேலில்லை.

ஃ

ஸ்ரீமான் ராஜா அவர்களின் தமிழ் நடை மிக மிக இனியது. வேறெவராலும் கைக்சொள்ள முடியாதது. கற்கண்டு போன்றது கம்பீரமான உயர்நடை. அத்தகையதோர் நடை அவரோடும் மறைந்தது. ஸ்ரீமான் இராஜா அவர்கள் குழந்தைகளிடத்து மிக்க அன்புடையவர். பாடசாலைச் சிறுவர்கள் துராப்பியாஸமின்றித் திருந்துவதற்காக "அன்பான பொம்சபை" என்று பல சபைகள் 60-க்குமேல் ஏற்படுத்தினர். சரித்திர ஆராய்ச்சிகளிலும், கல்வெட்டு சிலாசாசனங்களைச் சேகரித்து அறிவதிலும் மிக்க ஆர்வமுள்ளவராவார்.



## ஓர் யுவதியின் கண்ணீர்!

ஆ! என்னை மாலையிட்ட மணாளரின் கபடம் இருந்தவாறென்னே! அவர் ஒருநாள் என்னை நெருங்கி, "என் ஆருயிரே, மாணிக்க தீபமே, மடமயிலே! ஏதோ உன் கழுத்திலுள்ள அந்த கடியாரச் சங்கிலியை எடு பார்ப்போம்" என்றார். அவ்விதமே எடுத்து அவர் கையில் தந்தேன். ஆ! உனக்கு இவ்வளையல்கள் எத்துணை அழகைத் தருகின்றன! அவற்றை நானே திரும்பவும் உன் கரங்களில் புது நகைபோன்றும் போட்டு அதன் அழகைப் பார்க்க விரும்புகிறேன். அவற்றைச் சற்றே கழற்று" என்றார். நான் மறுபேச்சின்றிப் புன்னகையுடன் கழற்றித் தந்தேன். அவர் அவற்றைப் பெற்றுக்கொண்டதும் வேற்றுமுகமானர். கொடிய பார்வையுடன் என்னை நோக்கினர். "உன் லக்ஷணத்திற்கு நகைகளும் வேறேயா! என்று தீப்பொறு றேக்கக் கூறி மறுநிமிஷமே அந்த நகைகளுடன் வெளியிற் சென்றார். அன்று தந்த நகைகளை இன்னும் நான் பெறவில்லை; கேட்கவுமில்லை. என்னைப்போன்றும் கண்ணீர் சொரியும் காரிகைமார்க்கு விடிவுநாள் என்றேயோ? 'பெண்களின் முன்னேற்றம்' என்பதும் இது தானே? வீட்டில் சுதந்திரமின்றி நாட்டில் சுதந்திரம் கிடைத்துப் பயனென்னவோ?

# பிரிந்த காதலர்.

காதலனின் சோகம் :—



மறக்கவும் வசமோ? மறப்பதும் யாங்ஙனே? எப்படித் தான் மறக்க முடியும்? ஆ! சென்றுபோன நாட்கள் அவை. 'சென்றன'—சென்றனவே! இனி அவை திரும்பாவோ? திரும்புதல் ஏது? காட்சிக்கு இனித்திடுங் கண்ணாள். என் மனங் கவர்ந்த பெண்ணாள். லாவண்ய மிக்கதோர் மடமயில். அழகின் குன்று. ஆநந்த வல்லியாய் நின்றனள். அற்புதம் ஈந்தனள். களைத்தபோது களை தீர்த்திடத் தந்த அந்த பால் எத்துணைத் தித்திப்பு? ஆ! அவளது இனிய கானம் தானென்னே? தேவகானமும் அதற்கு நிகராமோ? என் கண்ணனையாள், கற்பின் மிக்காள், என்னருங்காதலி, என் ஜீவகல்பம், என்னை எதிர்த்து உரையாடிய மந்த மாருதம்—எத்துணைத் தீரமான வாசகங்களில் தன் கம்பீர சபதம் பேசினாள்? என்னே அவன்தன் வீரமொழியின் பான்மை! யாது கூறினள் அந்த மாது நல்லாள்? "எவ்விதத்தும் உம்மையே கணவனாக அடைவேன்" என்றாள். இவ்விதம் நிச்சயம் பேசி நீதி கூறிய அந்த நிர்மலகுமாரி நின்று நிலவிடும் ஸ்தலம்—நிலையம் இப்போது எங்கேயோ? கமலமலர்க் கர மடவார்தம் காதலின் பாங்கு—அதன் கண்ணியம்—ரமணீயம்—இவ்வகைத்தென விளக்கி யான் உணரப் பண்ணுவித்தவள் அந்தப் பாரத குமாரிதான். முதன் முதலாகக் காதலின் போதகம்—சிந்தனை—உணர்ச்சி-கிளர்ச்சிகொண்டது அந்த ரமணீமணியிடம் தான். அவளே எனக்குக் குருமணி. அந்த நீதிமேவி நிலைத்திடுமாமணி, என் நெஞ்சில் நிற்கும் சிந்தாமணி, தூய கற்பின் சிகாமணி—என் கண்ணெதிர்ப்படும் நாள் எப்போது? மனம் கலந்த இடத்திலன்றோ மங்களம்! உன்னையே நினைத்து உருகுகிறேனிங்கு. என்னை நீ நினைக்கவில்லையே! என்செய்வேன்?

ஃ

மற்றோரிடத்தில் காதலியின் துயரம் :—

என் இன்ப வடிவே! அன்புக்குவியலே! மித்திரா! வளர்பிறை மதியம் போன்றும் வளர்ந்து சிறந்த நம் காதல் இங்ஙனம் அலைந்துபட்டதென்னவோ? நலம் பெறு கணவர்தம் தடம்புய மருவிய மடந்தையரில் யானும் ஒருவளாவதென்றோ? பொருந்திய வினையால் வருந்திடுமிந்தப் பிரிவினைத் துயர் இன்னும் எத்தனை காலம்? வாலிப வயதாய் மதன் கணை தொடரக் காமம் கனிந்து கலவியை நினைந்திடு வேளை இது. புத்தியும் மருண்டு தத்தளித்துழன்று தயங்குகின்றேன். வருந்து மென்தாழ் மனந் தேற்றி, ஊழ்வினை மாற்றித் தமியேன் கவலை தணித்திட நீ வாராயோ! மனோகர மங்கள லோலா! எவ்விதத்தேனும் வருவீர் என்ற நம்பிக்கையினால்,—வாரா தொழியீர் என்ற துணிவினால்,—நிற்கின்றேன்.

'ஆவியென மேவி அகலேன் என அகன்'றாய்! இன்னும் எத்தனை நாள் தான் பிரிவாற்றுவதோ! பருவமங்கையர் வதுவை பாராட்டி இன்பலாபம் பெறுகலின்றித் துயரம் பேசுவது ஜென்ம பாபம். பசுபதி திருவருள் இசைவதுமென்றேயோ!



# பிரபஞ்ச தரிசனம்





இவ்வுலகினில் மூன்று வகையினர் உளர். உலகின் நன்மைக்காக எல்லாக் கஷ்டங்களையும் எற்றுத் தாங்கள் அடையும் சகல துன்பங்களையும் சந்தோஷமாகக் கருதுவோர் ஒரு சாரார். இவ்விதம் சிரமப்பட மனமின்றி மேற்கண்டவாறு துன்புறுவோரிடத்து மட்டும் அநுதாபமும் இரக்கமுமுள்ளோராய் ஒதுங்கி நிற்போர் இன்னொரு சாரார். இவ்விரு வகையிலும் சேராமல், உலக நன்மைக்காகப் பாடு படுவோரை இகழ்ந்தும், அன்னோரின் செயல்களைப் பரிஹஸித்தும், முடிவில் அன்னோரால் நன்மை உண்டாயின் அப்பொழுதுமட்டும் அதைப் பகிர்ந்து சுகிக்கக் காத்திருப்போர் மற்றொரு சாரார். உலகம் பல வழி.

॰॰

நீலகிரி மலையில் தொடுவர்களென்ற ஒரு வகுப்பாருண்டு. இவர்கள் மலையின் சிகரங்களில் சிறிய குடில்களில் வசிக்கின்றனர். இந்த ஜாதி ஸ்திரீகள் இயற்கை யழகும் வெண்ணிறமும் படைத்தவர்கள். சூது, மோசம், திருட்டு முதலிய துர்க்குணங்களை யறியார். தங்கள் குடிசைகளில் நுழையும்போதும், நுழைந்தபின்னரும் நிர்வாணிகளாகவே இருந்துவந்தனராம். இவ்வழக்கம் இப்பொழுது திருத்தமடைந்துள்ளது. குடிசையைவிட்டு வெளியே வரும்போது துப்பட்டி போன்ற ஒரு போர்வையைப் போர்த்துக்கொள்வார்கள். தொடுவர் ஜாதி ஸ்திரீகள் கூலி வேலை செய்யார். எருமைகளே அவர்கட்கு ஆஸ்தி. மற்றவர்களைக் கண்டால் முட்டவரும் எருமைகள் தொடுவரின் குரலைக் கேட்டால் சாதுவாய் நின்றுவிடும். இவைகள் கொடுக்கும் எதேஷ்டமான பாலிலிருந்து வெண்ணெய் எடுத்து நெய்யாகக் காய்ச்சி விற்பர். நீலகிரி முற்றிலும் இந்த நெய்யே உபயோகப்படுகிறது. யாரேனும் தொடுவர்களைப் பார்க்கச் சென்றால் அந்த ஜாதி புருஷர்களும் ஸ்திரீகளும் வெளியே வருவர். அவர்கட்குக் காசு அல்லது புகையிலை, பொடி, சாராயம் முதலியன கொடுத்தால் உடனே பாடத் தொடங்குவார்கள். இது வெகு வேடிக்கையா யிருக்கும். இவ்வகையோர் உதகமண்டலத்துக்கப்பால் இரண்டு மைல் தூரத்தில் அங்கங்கே மிகச் சிறிய குடிசைகளில் வசிக்கின்றார்கள். பாண்டவர் காலத்திலேயே இந்த ஜாதியார் இருந்ததாகச் சொல்லிக்கொள்ளுகின்றார்கள். யார் எவ்விதமாகப் போதித்தாலும் இம்மலை நாட்டார் சொந்தவூரைவிட்டு அந்யதேசங்கட்குப் போவதில்லையாம்.

॰॰

---

குறுகிய மனோபாவத்தினால் எற்பட்ட குயுக்தியானது தன்னை நம்பினோரிடத்துங்கூட வஞ்சகமாய் மோசம்செய்யத் தூண்டுகிறது.

சீயாம் தேசத்தில் மரித்தோரை அடக்கம் செய்வது வெகு ஆச்சரிய கரமா யிருக்கும். சவத்துக்கு பிகு வான சட்டை சராய்தனைப் போட்டுத் துணிகளைச் சுற்றி ஒரு மூலையிலுட் கார வைத்து, ஒரு குழாயை வாயில் நுழைத்து அதன் மூலமாய்ப் பாத ரஸத்தையும் தேனையும் கலந்து போடு வார்கள், அந்த சவத்தை வெகு நாட்கள்வரை அப்படியே வைத்திருப் பார்கள். அவைகளைத் தகனம் செய் யும்போது வெகு ஜாக்கிரதையோ டிருப்பார்கள். சவங்களின் சாம்பலை வெகு ஜாக்கிரதையோடு ஒரு கண்ணா டிப் பாத்திரத்தில் பத்திரப்படுத்தி வைப்பர். ஆத்மஹத்யம், அகஸ்மாத் மரணம், அம்மை நோய், வாந்திபேதி —இவைகளால் இறப்போரின் சவங் களைத் தகனம் செய்கிறதில்லை. அவர் களைப் புதைக்கின்றனர். பாவிகளும் அபராதிகளும் இறந்தால் அவர்களின் சவங்களைக் கொண்டுபோய் தேவஸ் தானத்தில் வைத்து வயிற்றையறுத்து மாம்ஸத்தை எடுத்துக் கொஞ்சம் நாய்க்குப் போடுவர். பிறகு கழுகுகள் எலும்பு நீங்கலாக மாம்ஸத்தைத் தின்றுவிடும். அதன் பிறகு அவ் வெலும்புகளைப் சட்டியில் வைத்து நெருப்பிட்டுச் சுடுகின்றனர். இவ்வி தம் செய்யும்வரை அவர்களின் ஆத் மாக்களுக்கு நரகவேதனை தப்புகிற தில்லையாம்.

ஃ

அநேகமாய் இந்தியாவுக்கு இரா ஜப்பிரதிநிதிகளாய் வருவோர் கீழுத்தி யோகஸ்தர்கள் சொல்வதையே நம்பிப் பத்திரங்களில் கையெழுத்து செய்வ துண்டு. ஒரு ஸமயம் டப்ரின் பிரபு தாமே எல்லாவற்றையும் கவனித்துத் தீர்மானிக்கவேண்டுமென்ற நற்கருத் தினால் ஒரு விஷயத்தைப்பற்றி சகல ரிகார்டுகளையும் கொண்டுவருமாறு கூறினர். அப்போது காரியதரிசி ஒரு வண்டி நிறையக் காகிதங்களை யடுக்கி வந்து அவைகளை லார்ட் டப்ரினுக் குக் காண்பித்து மேற்படி ரெகார்டு களையெல்லாம் படித்தால் பிரஸ்தாப விஷயத்தைப்பற்றித் தீர்மானிக்க முடியுமென்றார். அவர் அது முடியாத காரியமென்றெண்ணி காரியதரிசி சொன்னபடியே தீர்ப்பு எழுதிக் கையொப்பம் வைத்தார். மாஜி இரா ஜப்பிரதிநிதியான லார்ட் கர்ஸன் பிரபுவோ எல்லாவற்றையும் தாமே பரிசீலனை செய்யும் திறமையுடைய வர். கீழுத்தியோகஸ்தர்கள் அவரை ஏமாற்ற முடியவில்லை. இவர் இத்தனை சாமர்த்தியம் படைத்தவராயினும் ஒரு விருந்தில் ஏமாற்றப்பட்டா ராம். அவ்விருந்தின்போது ஏழை யாகிய ஒரு முஸ்லிம் "ஸ்வாமி, எனக் குப் பசி அதிகம், ஆகாரமில்லை" என் றானாம். அவன் என்ன சொன்னா னென்று லார்ட் கர்ஸன் தம் அருகே நின்ற வேறொரு முஸ்லிம் கனவானைக் கேட்க, அதற்கு அவர் உள்ளது கூறப் பின்னடைந்து, "பிரபோ, தங்களை ஸ்தோத்திரம் செய்கிறான்" என்று உரைக்க, லார்ட் கர்ஸனும் அதை உண்மை யென்றெண்ணி சும்மா விருந்துவிட்டாராம். ஏழையின் பசி ஆறவில்லை. லார்ட் கர்ஸனும் தாம் ஏமாறியதை அறியவில்லையாம்.



அன்பு கலவாத பண்டம் என்னத்திற்கு உபயோகம்? முதலாவது வாய்க் குத்தான் பிடிக்குமா? சரீரத்திலே தான் ஒட்டுமா? உப்பில்லாக் கீரையானாலும் அன்போடு ஆக்கிப் படைத்தால், அது தேவாமிர்தத்தைவிட ஆயிரம் பங்கு மேலானதல்லவா?

# நாவல்களின் வாசிப்பு.



நாவல்கள் வரைதல் சுலபமன்று; அது மஹா கஷ்ட சாத்தியமான காரியம். ஒரு நாவல் எழுதுதற்கு எத்துணையோ அபாரமான யோசனைகள் வேண்டும். கற்பனை நயம் மிகுந்து பரிமளிக்க வேண்டும். இன்னுமொரு நாவல் எழுதி விடுக்காரோவென விருப்புடன் எதிர்நோக்கி இயம்பும்வாறு இருக்க வேண்டும். பன்னாட்களின் யோசனையில் அது ஒரு உருவம் பெறவேண்டும். அது பூத்துக் காய்த்துக் கனிய வேண்டும். ஒரு நாவல் எழுத ஒரு வருஷமும் ஆகலாம்; பல வருஷங்களும் செல்லலாம். மனது பொருந்தி விஷயங்களும் ஒன்றுகூடி விட்டால் இரவு பகல் கண்விழித்து எழுதி வாரத்திலும் முடிக்கலாம்; மாதத்திலும் பூர்த்தி படுத்தலாம். அந்தக் காரியம் மனம் ஒன்றுகூடிப் பொருந்துவதை யனுசரித்துள்ளது. அது நமது செயலல்ல; தெய்வத்தின் செயல்; "ஆதுநாவின்" கூறுபாடு. மனதைக் கட்டாயப்படுத்திக்கொண்டு நாவல் எழுத முயன்றால், அந்த நாவல் சுவை ததும்பியதாக ஒளிராது. நமது மனமே நம்மை நாவல் ஒன்று இயற்றும்படி நமக்குக்கட்டளையிட்டு, அதற்கேற்ப விஷயங்களைச் சரமாரியாக வாரி வாரிக் கொடுத்துக்கொண்டே செல்லவேண்டும். அப்பொழுதுதான் அந்த நாவல் அற்புதமான அமைப்பில் உருக்கொண்டு உயர்வு பெற்று உன்னதம் கொள்ளும். அதற்கான காலம் வந்தால்தான் அது பொருந்திமுடியும்.

ஃ

நமது தமிழ் நாட்டில் தற்போது நாவல்கள் வாசிப்போர் பெருகி வருகின்றனர். நாவல்களின் அழகிய பெயரில் மயங்காமல் எந்த ஆசிரியர் இயற்றியதெனத் தெரிந்து தக்கோர் வரைந்ததையே பெற்றுப் படிப்பது தான் மேன்மை. பொதுவாக, நாவல்களின் வாசிப்பு அறிவைக் கூர்மைப்படுத்தி விடுகின்றது. அந்த நாவலை இயற்றிய ஆசிரியரது நெடுநாளைய அனுபவங்களை மிகு எளிதில் வாசகர்கள் கிரகித்துக்கொள்ள சந்தர்ப்பம் வாய்க்கின்றது. சொற்பமே படித்தவர்களுங்கூட நாவல்கள் வாசிக்கும் பழக்கத்தால் மிகு புத்திமான்களாகி இருக்கிறார்கள். மனிதனுடைய அறிவைத்தூண்டி விடுதற்குக் கவிதைக்குப் பிறகு நாவல்களே நல்ல வேலையைச் செய்கின்றன. படிப்பவர் இவ்விதமாக வெல்லாம் பயன் அடையுமாறு அதற்கேற்ற ரீதியில் கற்பனை நயம் மிகுந்தோங்க அமைத்து அபார சாமர்த்தியத்துடன் நாவல்களை நற்கருத்துகளோடும் நிர்மாணித்தல் அதி உத்தமமான வித்யா தானமாகும்.

ஃ

நாவல்களைப் படிப்பதிலும் முக்கிய விஷயம் ஒன்றுண்டு. இன்றைக்கு நான்கு பக்கங்கள் திருப்பி, நாளைக்கு மூன்று பக்கங்கள் பார்த்து, அடுத்த

---

ஒருவரைக் குறித்துச் சிபாரிசு செய்யுமுன் அந்த மனிதர் அயோக்கியமாக நடந்துகொண்டால் அது தன் கௌரவத்தையும், தன்மீது பிறருக்கு இருக்கும் நம்பிக்கையையும் பங்கப்படுத்தி விடுமென்பதை முதலில் நினைத்துப் பார்த்து எச்சரிக்கை பெறக்கடவர்.

வாரத்திலோ மாதத்திலோ பின்னும் சில பக்கங்களைப் படிக்க எண்ணுவது பெரும்பிழை. அது ஒருபோதும் ருசியாது, சுவையும் நல்கிடாது; மதுரமுடையதுமாகாது; நற்செய்கையுமன்று. இலையில் காய்கறிகளுடன் அன்னம் பரிமாறியபின்பு உட்கார்ந்து உண்ணுகைக்கு வந்த நாம் முற்றிலும் புசித்து விட்டே எழுந்திருக்கவேண்டும். அதுதான் கிரமம். அவ்வாறின்றிப் பலமுறை எழுந்து மறுபடியும் புசிக்க உட்காருதல் பாங்குடைத்தாகா; திருப்தியுள்ளதுமல்ல. இலையைவிட்டு எழுந்த பின்பு மீண்டும் உண்ணுதற்கு உட்காரலாகாதென்பதும் பெரியோர்களின் வாசகம். எனவே, ஒரு நாவலைக் கையில் எடுத்தால், அதை முற்றும் படித்துவிட்டுக் கீழே வைக்கும்படியான மனோபக்குவ லக்ஷணத்தை நம்மில் உண்டாக்கிக்கொள்ளவேண்டும். அப்போதுதான் அது ருசிக்கும். நாவலின் கடைசிப் பக்கங்களை ஒருபோதும் பார்க்கொணாது. முதலிலிருந்து வாசித்தே கடைசி பக்கத்திற்குச் செல்லவேண்டும். இல்லாவிடில் அது நாவலின் சுவையைக் கொலை செய்வதாகும்; அவசரப்பட்ட ஒழுங்கற்ற செய்கையுமாகும். நாவலைப் படித்துக்கொண்டு வருமிடையே ரஸமான இடங்களையும், அருமையான பதஜோடினைகளையும் ஆங்காங்கு குறிப்புகள் செய்து கொண்டே செல்லவேண்டும். அந்த நாவலின் உத்தமமான கருத்துகளும், விசாலமான அனுபவங்களும் நம் இதயத்திற் பதியுமாறு செய்வித்துக் கொள்ளுதலும் ஞானபிவிர்த்திக்கு நலம் பயப்பதாகும்.

ஃ

நாவல்களின் விற்பனையே இப்பொழுது மிகக் குறைவு எனுங் கூக்குரல் எங்கும் எழுகின்றது. ஆயினும், நாவல்களின் வாசிப்பில் அதிர்ப்தி தோன்றிவிட்டதாகச் சொல்லொணாது. பல நாவல்களை இயற்றிய ஆசிரியர்களுக்குங்கூட ஒரு புதிய நாவல் அன்னோரின்கண் முன்புதென்படில் ஆவலுடன் வாசிப்பதற்கு நாவில் ஜலம் ஊறும். "எனக்கு ஒரு கதை சொல்லு" என்று கேட்கும் இளங் குழந்தைகள் எங்கும் உள்ளார். ஒரே ஆங்கில நாவலைப் பலரும் மொழிபெயர்த்து விடுவதில், அந்தப் பல நாவல்களையும் ஒருங்கே பெற்று அவை யாவும் ஒரே கதையாக இருக்கக்கண்டு ஏமாறுவதில் நாவல்களின் மீதுள்ள சிரத்தை தவறியிருக்கலாம். அவ்வளவேயன்றி நாவல்களை வாசிப்பதிலுள்ள ஆவல் குன்றிவிட்டதாகக் கூறுவதற்கில்லை. உத்தமமான நாவல்களைத் தெரிந்தெடுத்துப் பெற்று வாசித்து அவற்றினை இயற்றிய ஆசிரியர்களை ஆதரித்தல் வேண்டும். நாவல்களின் வாசிப்பில் அளவற்ற நன்மையுண்டென்பதை அவரவரும் தத்தம் அனுபவத்திற் காணலாம்.

---

அயர்வு மிகுதியாகுந்தோறும் உறக்கம்வந்து போராடுகிறது. அதற்கு இடம் தரினோ செய்ய நினைத்த வேலை பாதியில் தொங்கி அப்பொழுதுக்கே முற்றுப் பெறுதற்கின்றிப் போகிறது. என் செய்ய? உறக்கத்தை வெல்லவுங் கூடவில்லை.

---

ஒரு கதையில் பின்வருமாறு உளது:—"தந்தை தூரதேசத்திற்குச் செல்லுகிற தன் குமாரனைக் கப்பலுக்குள் போகவிட்டு வழியனுப்பித் திரும்பினார். அவர்கள் இருவரும் அதற்குப்பின் ஒருவரை ஒருவர் காணப்பெற்றதில்லை." அதுவே கடைசி சந்திப்பு! கடைசி தரிசனம்!! கடைசி!!! கடைசி!!!!



# பெரியாரின் மொழிகள்



(177-ம் பக்கத் தொடர்ச்சி.)



798. Adversity makes a man wise, not rich.

வறுமை ஒருவனைப் புத்திகூர்மையாக்குகிறது. ஆனால், பணக்காரனுக்கு கிறதில்லை.

799. A man must become wise at his own expense.

ஒவ்வொரு மனிதனும் தன்னாலேயே புத்தியில் சிறந்தோனாக்கிக் கொள்ளவேண்டும்.

800. He that never thinks can never be wise.

எவனொருவன் ஆழ்ந்து யோசிப்பதில்லையோ, அவன் எக்காலத்திலும் புத்தியில் சிறந்தோனாகான்.

801. What is done in a hurry is never well done.

அவசரத்தில் செய்யும் ஒவ்வொரு காரியமும் செவ்வையாக இருத்தல் முடியாது.

802. If you cannot have the best, make the best of what you have.

உனக்குச் சிறந்தது கிடைக்காவிட்டால் உன்னிடத்திலிருப்பதைச் சிறந்ததாக்கிக்கொள்.

803. Next to excellence, is the appreciation of it.

நல்லதாக இருப்பதற்கு அடுத்தது அதைப் பிறர் அனுபவித்து ஸந்தோஷ மிகுதலே.

804. Make the future fairer than the past.

கடந்தவைகளைவிட வருங்காலத்தைச் சிறந்ததாக்கு.

805. Don't throw away the old shoes till you have got new ones.

பழய செருப்புகளைப் புதிய செருப்பு வாங்கும்வரை வைத்திரு. அதற்கு முன் தள்ளிவிடாதே.

806. God comes at last, when we think He is farthest off.

கடவுள் அதிக தூரத்தில் நம்மைக் கவனியாதிருக்கிறாரென்று நாம் நினைக்கையிலே கடைசியில் பிரஸன்னமாகிறார்.

807. Past and future seem best, things present worst.

கடந்தவைகளும், இனி வரப்போகிறவைகளும் சிறந்ததாகத் தோன்றும். இப்பொழுது இருப்பதையோ நல்லதாக நினைப்பதில்லை.

808. No answer is also an answer.

---

முதனூலின் பொருளும் சொல்வன்மையும் தாம்செய்யப் புகும் வழிநூலினும் வரச்செய்வது மொழிபெயர்ப்பவரின் இலக்காகவேண்டும்.

மௌனமும் சில சமயங்களில் சரியான பதிலாகிறது.

809. Over the greatest beauty hangs the greatest ruin.

மிகுந்த அழகிற்கு மிகுந்த கேடு இருக்கிறது.

810. A thing of beauty is a joy for ever.

அழகு எவ்விடத்தி லிருக்கிறதோ அங்கு ஸந்தோஷம் எப்போதும் இருக்கிறது.

811. A fool flatters himself, a wise man flatters a fool.

சந்தர்ப்பம் வாய்க்குமுன் ஒரு சிநேகன் நமக்கு அறிமுகமாவதில்லை.

812. He has the power who the majority believes in.

பெரும்பான்மையோர் எவனிடத்தில் நம்புகிறார்களோ அவனிடத்தில் அதிகாரம் இருக்கிறது.

813. Anger makes a rich man hated, and a poor man scorned.

கோபம் பணக்காரனை வெறுக்கும்படியும், ஏழையை அவமதிக்கும்படியும் செய்கிறது.

814. To err is human, to forgive divine.

தப்பு செய்வது மனிதர்களுக்கு இயற்கை. அதை மன்னிப்பது தெய்வீகத்தன்மை.

815. Men's thoughts are much according to their inclination.

மனிதரின் எண்ணங்கள் அவர்கள் எவ்வழி செல்கிறார்களோ அதற்குகந்தவாறே இருக்கும்.

816. Good that comes too late is good as nothing.

சரியான காலத்தில் வராத நன்மை நமக்கு உபயோகப்படுவதில்லை.

817. Drink nothing without seeing it, and sign nothing without reading it.

பார்க்காமல் ஜலத்தைப் பருகாதே. படியாமல் எதிலும் கையொப்பமிடாதே.

S. ஸ்ரீரங்க ராஜு,
"ஜெகந்நாத பாக்" சைதாபேட்டை.

## துப்பறியும் நாவல்கள் !

"தானவன் என்ற போலீஸ் நிபுணன் கண்டுபிடித்த அற்புதக் குற்றங்கள்" என்ற பெயருடன் காலஞ்சென்ற கதாசிரியர் பண்டித நடேச சாஸ்திரியார் 50-வருஷங்களுக்கு முன்னர் வெளியாக்கினர். ஆனால், அந்தக் காலத்தில் அந்நூலின் பெயரைக்கொண்டு அது ஒரு துப்பறியும் நாவல் என்று வெகு பேர் அறிந்துகொள்ளவில்லை. என்னவோ போலீஸ் சங்கதியென்று கவனியாதொழிந்தனர். புஸ்தகமும் நாற்பது வருஷங்கட்குப் பிறகுங்கூட முதல் பதிப்பு விலைக்குக் கிடைப்பதாய் விற்காமல் தங்கியிருந்தது. அது ஒரு காலம்! இப்பொழுதோ துப்பறியும் நாவல்களுக்குத் தான் எங்கும் விசேஷித்த மதிப்பு.

# " அமிர்த குணபோதினி "

## ஆங்கீரஸ வருஷத்திய ஆடி மாத பஞ்சாங்கம்.

| யோகம் | ஜூ | தமிழ் | வார | திதி, நக்ஷத்திரம், விரதாதிகள் முதலியவை. |
|---|---|---|---|---|
| | | | | ⌊னம், பிரதோஷம். |
| ம-அ | 15 | 1 | வெள் | துவா-8-53, கேட்-35-11, கடகரவி 28-5 தக்ஷிணய |
| சி | 16 | 2 | சனி | திர-2-30, உப-54-13, மூல-31-5, கரிநாள். |
| சி-அ | 17 | (5-23) 3 | ஞா | ○ 51-48, பூரா-27-45, வியாஸபூஜை. |
| ம-அ | 18 | 4 | திங் | பிர-48-10, உரா-25-28, ஆஷாடபகுளம். |
| சி | 19 | 5 | செவ் | துவி-46-5, ஶ்ரவ-24-35, அசூன்யசயன விரதம். |
| பி-சி | 20 | கடகஞீ 6 | புதன் | திரி-45-38, அவி-25-19. |
| ம-சி | 21 | 7 | வியா | சது-46-57, சத-27-49. |
| சி | 22 | 8 | வெள் | பஞ்-50-0, பூட்-32-1. |
| சி-பி | 23 | 9 | சனி | ஷஷ்-54-31, உட்-37-43, ஸிம்மாயனம் 4-54. |
| அ-சி | 24 | 10 | ஞா | ஸப்-60-0, ரேவ-44-30, திருதினஸ்பிருக் கரிநாள் |
| சி | 25 | 11 | திங் | ஸப்-0-2, அசு-51-56. |
| சி | 26 | 12 | செவ் | அஷ்-5-32, பர-59-18. |
| அ | 27 | 13 | புதன் | நவ-12-1, கிரு-60-0, ஆடி கிருத்திகை. |
| ம-உ | 28 | 14 | வியா | தச-17-9, கிரு-6-4. |
| ம-சி | 29 | 15 | வெள் | ஏகா-21-7, ரோ-11-46. |
| சி | 30 | 16 | சனி | துவா-23-46, மிரு-16-11, பிரதோஷம். |
| சி | 31 | 17 | ஞா | திர-24-53, ஆரு-19-8, சிவராத்திரி. |
| அ-சி | 1 | 18 | திங் | சசி-24-31, புந-20-40, காவேரிபெருக்கு ஆண்டான் ஹம்ஸவாகனம். [திருவையார் அப்பர்காக்ஷி. |
| சி | 2 | 19 | செவ் | ● 22-55, பூச-20-55, ஆடி அமாவாசை திதிதுவயம் |
| சி | 3 | 20 | புதன் | பிர-20-10, ஆயி-20-2, ஶ்ரவணசுத்தம், கரிநாள். |
| அ-சி | ஆகஸ்டு 4 | 21 | வியா | துவி-16-29, மக-18-15, ராமேசுவரம் ரதம். |
| சி | 5 | 22 | வெள் | திரி-12-7, பூர-15-46, திருவாடிப்பூரம். |
| உ-ம | 6 | 23 | சனி | சது-7-13, உத்-12-45, கருட-நாக-பஞ்சமி. |
| அ-சி | 7 | 24 | ஞா | பஞ்-1-56, உப-54-28, ஹஸ்-9-24, சூரியஷஷ்டி |
| பி-அ | 8 | 25 | திங் | ஸப்-50-46, சித்-5-50, திருக்கச்சியூர் யானைவாகனம். |
| சிமசி | 9 | 26 | செவ் | அஷ்-45-11, ஸ்வா-2-9, உப-56-20. |
| அ-சி | 10 | 27 | புதன் | நவ-39-35, அநு-54-58. [கருடன். |
| பி-சி | 11 | 28 | வியா | தச-34-25, கேட்-51-46, ததீவிரதம் காளஹஸ்தி |
| அ-பி | 12 | 29 | வெள் | ஏகா-29-34, மூல-49-3, வரலக்ஷ்மி விரதம். |
| சி | 13 | 30 | சனி | துவா-25-21, பூரா-46-57, சனிப்பிரதோஷம் |
| அ | 14 | 31 | ஞா | திர-21-53, உரா-45-44, வராஹஜயந்தி திதிதுவயம் |
| அ-சி | 15 | 32 | திங் | சசி-19-24, ஶ்ரவ-45-33, ஸிம்மரவி 49-4, ஆடிபண்டிகை, கஜேந்திரமோக்ஷம், ருக் உபாகர்மம். |

| | | | |
|---|---|---|---|
| | | | சுக் செ |
| ரா | 15உக்கு | | ரவி |
| சனி | ராசி | | பு-கு கே |
| | | | |

" அமிர்த குணபோதினி " ப்ரஸ், 302, தங்கசாலை வீதி, சென்னை—1932.